

# நாடுகண்டவர் வரலாறு

## 2

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிராட்வே, சென்னை-1.

கழக வெளியீடு: ௪௧௦.

# நாடுகண்டவர் வரலாறு

## (இரண்டாம் புத்தகம்)



கழகத்தின் சிறுவர் கல்வி
அறிஞர் கூட்டத்தார் எழுதியது

[Approved by the Madras Text-Book Committee for Non-detailed Study, Vide Gazette, page 114, dated 23-5-50]



:: திருநெல்வேலித் தென்னிந்திய ..
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. சென்னை-1.

# பதிப்புரை

செயற்கரிய செய்த பெரியோர் வரலாறு கூறும் தன்மையதான 'நாடுகண்டவர் வரலாறு' என்ற முதற் புத்தகத்தின் தொடர்பாக அமைந்த இரண்டாம் புத்தகமாகிய இதை மக்கள் முன்னிலைக்குக் கொண்டுவருகின்றோம். மக்கள் இனத்துக்கே இவ்வுலகத்தின் பல பிரிவுகளையும் கண்டறிவுறுத்திப் பயனடைச்செய்த பெரியோரின் வரலாற்றுநிகழ்ச்சிகள், யாவராலும் விரும்பியுணரத்தக்கனவாதலாலும், சிறப்பாக மாணவர்கட்கு உள்ளக் கிளர்ச்சியைக் கொடுத்துச் செயற்கரிய செயலின் மேன்மையை யுணர்த்தித், தாளாண்மையையும் வினைசெயற் பற்றினையும் தூண்டுமாதலாலும், இப் புத்தகத்தையும் தமிழுலகம் ஏற்று மகிழுமாக!

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## பொருளடக்கம்





# நாடுகண்டவர் வரலாறு

## (இரண்டாம் புத்தகம்)

### க. [1]மங்கோ பார்க்

#### ஆப்பிரிக்காக் கழகம்

ஐந்து தலைமுறைகளுக்கு முன் [2]ஆப்பிரிக்கா கண்டத்தைப்பற்றி மக்களுக்கு மிகுதியாக ஒன்றும் தெரியாதிருந்தது. ஆப்பிரிக்காவின் கடற்கரை யோரங்கள் மட்டும் ஆப்பிரிக்காவைச்சுற்றி இந்தியாவுக்குச் சென்ற வணிகர்களுக்கு அப்போது தெரிந்திருந்தது. ஆப்பிரிக்காவின் கரையோரங்களைச் சுற்றிச் செல்லும் கப்பல்கள் தங்கிச் செல்லக் [3]கடற்கரைப்பட்டினங்கள் ஆங்காங்கு ஏற்பட்டன. கடற்கரைப் பட்டினங்களில் தந்தம், தங்கம் முதலியன பண்டமாற்றப்படுவதுண்டு. ஆதலால் [4]தங்கக்கரை, [5]தந்தக்கரை முதலிய பெயர்கள் ஏற்பட்டன; [6]ஜேம்ஸ் புரூஸ் என்னும் ஸ்காட்லந்து நாட்டினர் ஒருவர் [7]அபிசீனியாவில் இரண்டு ஆண்டுகள் தங்கியிருந்து இங்கிலாந்துக்குத் திரும்பியபோது (நீல்) [8]நைல் நதியின் படத்தைத் தயாரித்துக்கொண்டு வந்தார். ஆப்பிரிக்கா கண்டத்தின் உள்நாட்டைப்பற்றிப் பல விந்தையான வரலாறுகளைச் சொன்னார். ஆப்பிரிக்காவைப்பற்றி மக்களுக்கு ஊக்கம் உண்டாயிற்று. இந்த ஊக்கத்தை வளர்க்கவும் ஆப்பிரிக்காவைப்பற்றிய

---

1. Mungo Park. 2. Africa. 3. Calling places. 4. Gold Coast. 5. Ivory Coast. 6. James Bruce. 7. Abyssinia 8. Nile.

விவரங்களை அறியவும் ஆங்கிலேயரிற் சிலர் ஒரு கழக மாகச் சேர்ந்தார்கள். அவர்கள் இலண்டன் மாநகரில் உணவுவிடுதி யொன்றில் அவ்வப்போது கூடி வந்தார் கள். ஒவ்வொரு சனிக்கிழமையும் [1]ஆப்பிரிக்கா கழகத்தி னர் அவ்வுணவு விடுதியில் ஓர் அறையில் கூடுவது வழக் கம். அக்கூட்டத்துக்கு நாட்டு மக்களிற் சிறந்தவர் பலரும் [2]ராயல் கழக அறிவியல் நிபுணர்களும் வந்து கலந்து கொண்டார்கள். அக்கழகத்தின் தலைவர் தம் இளமையில் [3]நாவிகர் குக் என்பவருடன் நாடு கண் டறியச் சென்றவர்களுள் ஒருவர்.

ஒரு நாள் மாலை அவர் கழக உறுப்பினர்களைப் பார்த்து, "நாம் எல்லோரும் ஆப்பிரிக்கா கண்டத்தின் படத்தை உருவாக்குவதில் ஊக்கம் கொண்டிருக்கின் றோம். அக் கண்டத்தைக் கண்டறியப் பற்பலரை அனுப்பியும் அக் கண்டத்தை அறிந்துகொள்வது அரிதாகின்றது. நைஜர் ஆற்றைக் கண்டுபிடிக்க முடியவே இல்லை.

## 'மூரர்' இராச்சியம்: 'நைஜர்' நதி

[4]"ஹெறொடோட்டஸ் காலம் முதல் "நைஜர்" "நைஜர்" என்ற பெயரை மட்டும் கேட்டு வருகின்றோமே யொழிய, அவ்வாற்றை நேரில் கண்ட வெள்ளையர் எவரும் இலர். ஒருகால் அதுபோன்ற ஆறொன்றும் இல்லையோ! ஆயினும் கிட்டத்தட்ட ஆயிரம் ஆண்டு கட்குமுன்னரேயே [5]பெர் பெர் மூரர் என்னும் இனத்தார் [6]சூடான்நாட்டையும் [7]சகாரா பாலைநிலத்தையும் கடந்து ஒரு பேராற்றின் வழியே வந்து நீக்ரோமக்களை

1. African association. 2. The Royal Academy. 3. Captain Cook. 4. Herodotus. 5. Berber Moors. 6. Sudan, 7. Sahara.

வென்று ஒரு பெரிய நாட்டை ஏற்படுத்தி ஆண்டதாகச் சொல்லுகிறார்களே! அந்நாட்டின் நடு நகராயிருந்த [1]'டிம்பக்ட்டு'வின் பெருமையைப்பற்றிப் பலவாறாகப் பேசுகின்றார்களே! டிம்பக்ட்டு பொன் கூரைகள் நிறைந்த ஊர் என்றும் இலண்டனைப்போல் செல்வத்திற் சிறந்ததென்றும், அறிவாளிகள் நிறைந்த இடமென்றும், மூரர்களுக்குப் பெருமையளிக்கக்கூடிய இடமாயிருந்ததென்றும், அந்நகரம் [2]நைஜர் கரையில் அமைந்து இருந்ததென்றும் சொல்லுகின்றார்களே! ஆயினும் வெள்ளையர்க்கு மட்டும் டிம்பக்ட்டுவும் மூரர் இராச்சியமும் கேள்வியளவில் அன்றி நேரில் காணப் படாதனவாக இருக்கின்றனவே. இந்த மூரர்களையும் நைஜரையும் பற்றிய வரலாற்றை நாம் ஆராய்ந்து பார்த்துவிடவேண்டும்," என்றார்.

கி. பி. 1788-ஆம் ஆண்டில் அக்கழக உறுப்பினர்கள் அவ்வாராய்ச்சியை நடத்தி விடுவதென்று முடிவு செய்தார்கள்.

அவ்வாறே அவர்கள் நைஜர் ஆற்றைக் கண்டு பிடிக்க ஒருவரை அனுப்பினார்கள். அவர் ஆப்பிரிக்காவில் இறங்கிக் காட்டுக்குள் போனவுடன் இறந்து போனார்.

மறுபடியும் ஒருவரை அனுப்பினார்கள். அவரை மூரர்கள் எதிர்த்துத் தடுத்துவிட்டார்கள்.

மூன்றாம் முறையாக ஆங்கிலப்படை அதிகாரி ஒருவர் போனார். அவரும் ஆப்பிரிக்கா காட்டில் மடிந்தமையால் நைஜர் கண்டுபிடிக்கப் படாமலேயே இருந்தது.

---

1. Timbuktu. 2. The Niger.

1793-ஆம் ஆண்டில் ஒரு பிற்பகலில் ஆப்பிரிக்கா கழகத்தலைவர் ஒருவர் நான்காவதாக ஆப்பிரிக்காவைக் கண்டறியும் அரியவேலைக்கு முன் வந்திருப்பதாகக் கழகத்தாருக்குத் தெரிவித்தார். ஆனால், இருபத்தைந்து ஆண்டுகள்கூட நிரம்பாத அவ்விளைஞர் அந்த அலு வலுக்கு ஏற்றவரா என்று ஐயப்பட்டார். அவ்விளைஞருடைய பெயர் [1]மங்கோ பார்க்.

மங்கோ பார்க்

மங்கோ பார்க் 1771-ஆம் ஆண்டு செப்டம்பர் 10-ம் நாள் [2]ஸ்காட்லந்தில் [3]செல்கர்க் என்னும் ஊரருகில் அவருடைய தந்தையாரின் பண்ணையில் பிறந்தார்; இளைஞராயிருந்தபோது அவர் படிப்பதிற் பெரு விருப்புடன் இருந்தார். அதைக்கண்ட தந்தையார் மங்கோ பார்க் படித்துப் பட்டம்பெற்று அமைச்சுரிமை கூடப் பெறுவார் என மனக்கோட்டை கட்டினார். ஆனால், தம்முடைய பதினைந்தாம் ஆண்டில் மங்கோ பார்க் மருத்துவக்கலை பயில விரும்பினார். அதனால் அவரை ஒரு மருத்துவரிடம் தொழில் பயில விட்டார்கள். பதினெட்டாம் ஆண்டில் [4]எடின்பரோ பல்கலைக்கழகத்தில் மருத்துவம் பயிலப்போனார். மூன்றாண்டுகளில் மருத்துவப்பட்டம் பெற்றபின் அவருக்குப் பயணம்போகும் பேரவா மூண்டது. அதைத் தடுக்க இயலாமல் [5]கிழக்கிந்தியத் தீவுகளில் ஒரு கப்பல் மருத்துவராக ஓராண்டு இருந்தார். கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து இங்கிலாந்து திரும்பியபோதுதான் ஆப்பிரிக்காக் கழகத்தினரின் நோக்கம் அறிந்து மங்கோ பார்க் அக்கழகத்துக்கு விண்ணப்பம் அனுப்பினார்.

---

1. Mungo Park. 2. Scotland. 3. Selkirk. 4. Edinbrough University. 5. East Indies.

ஆப்பிரிக்காக் கழகத் தலைவரை மங்கோ பார்க் நேரில் கண்டபோது அவரைவிட ஆண்டிலும் ஆற்றலிலும் மிகுந்தவர்கள் அக்கழக அலுவலைமேற்கொண்டு சென்றபோது உயிரிழக்கவும் நேரிட்டதென்று கழகத் தலைவர் சொன்னார். அதைக்கேட்ட மங்கோ பார்க்கின் ஊக்கம் முன்னைவிடப் பெருகியதே ஒழியக் குன்றவில்லை. அதைக்கண்ட ஆப்பிரிக்காக் கழகத் தலைவர், "நைஜர் ஆற்றைக் கண்டுபிடிக்கவேண்டும். யாருமறியாத பெருங்காடுகளுக்கப்பால், பகைபூண்ட மூரர் நாடுகளுக்கப்பால், உமக்கு முன் சென்றவர்கள் இறந்த இடங்களுக்கப்பால் நைஜர் ஆறு ஓடுகின்றது. அதைக் கண்டுபிடிக்கவேண்டும்," என்று மங்கோ பார்க்குக்குப் பணித்தார்.

புறப்பாடு—காம்பியா நதிமுகத்தில் தங்கல்

1795-ஆம் ஆண்டு மே திங்களில் மங்கோ பார்க் இங்கிலாந்தைவிட்டுப் புறப்பட்டார். ஒரு திங்கள் பயணஞ்செய்து ஆப்பிரிக்காவின் மேற்குக் கரையில் [1]காம்பியா நதி முகத்தில் வந்து இறங்கினார். அங்கிருந்து இருநூறு கல் தொலை உள்நாட்டுக்குள் போனார்; அங்கே ஒரு நகரில் [2]லெயிட்லி என்ற மருத்துவருடைய விருந்தினராக ஆறு திங்கள், மாரிகாலம் முடியும் வரையில் தங்க நேர்ந்தது. அங்கே தங்கியவுடன் பார்க்குக்குக் காய்ச்சல் கண்டது. இரண்டு திங்கள் வெப்பு நோயால் தொல்லைப்பட்டார். தமக்குக் கிடைத்த ஓய்வைப் பிற் பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துகொள்வதில் கழித்தார். அக்காலத்தில் நீக்ரோ மக்களுடைய பழக்க வழக்கங்களைப்பற்றித் தெரிந்துகொண்டார்.

1. Gambia. 2. Dr. Laidley.

அங்கிருந்த வணிகர்களுடன் உரையாடித் தாம் கடந்து செல்லவேண்டிய நாடுகளைப்பற்றிய எல்லா விவரங்களை யும் அறிந்துகொண்டார். அவர்களுடைய மொழியை யும் கற்றுக்கொண்டார். தம்முடைய அறையிலிருந்த சன்னல் வழியாக வெளியே பார்த்தபோது நீக்ரோ அடிமைகள் தங்கத் தூள்களையும் தந்தங்களையும் சுமந்து வருவது தெரிந்தது. நீக்ரோ அடிமைகள் சங்கிலிகளால் பிணைக்கப்பட்டிருந்தார்கள். நீக்ரோக்களில் பெரும் பாலோர் அடிமைகள் என்று மங்கோ பார்க் தெரிந்து கொண்டார்.

### பயணம்

மாரிகாலம் முடிந்ததும் டிசம்பர் இரண்டாம் நாள் மங்கோ பார்க் தம்முடைய பயணத்தைத் தொடங் கினர். அவருடன் சென்றவர்கள் மிகச் சிலரே. லெயிட் லியின் உதவியால் இரண்டு நீக்ரோ பணியாளர்களும் முகம்மதிய நீக்ரோ ஒருவரும், நீக்ரோ பொற்கொல்லர் ஒருவரும், அடிமைகளை வாங்கிவிற்கும் வணிகர் இரு வரும், மங்கோ பார்க்குடன் சென்றூர்கள். மங்கோ பார்க் ஒரு குதிரைமீது ஏறிக்கொண்டார். தங்கள் உடைமை களை இரு கழுதைகளின்மேல் ஏற்றிக்கொண்டு பணி யாட்களும் ஏறிக்கொண்டார்கள். மங்கோபார்க் பண்ட மாற்றுக்காக மணிகள், புகையிலை முதலியவற்றையும், மாற்று உடைகளையும், ஒரு குடையையும், இரண்டு திசை காட்டிகளையும், ஒரு வெப்பமானியையும், சில துப்பாக்கிகளையும் கொண்டுபோனர்.

### நண்பரின் அச்சம்

மங்கோபார்க்கை வழியனுப்ப லெயிட்லியும், ஆங் கிலேய வணிகர் இருவரும் சிறிது தொலை அவருடன்

சென்றார்கள். இரண்டாம் நாள் மாலையில் அவர்கள் மங்கோ பார்க்கைப் பிரிந்தபோது அவரை இறுதியாகப் பார்ப்பதாகவே நினைத்தார்கள். ஆப்பிரிக்காவின் உள் நாட்டுப் பயணத்தின் இடர்கள் அவர்களுக்கு நன்கு தெரியும். வெப்பத்தினால் நோய்களும், காட்டு விலங்குக ளாலும் காட்டு மக்களாலும் இடையூறுகளும் உண் டாகலாம் என்று அஞ்சினார்கள். மங்கோ பார்க்குடன் மிகச்சிலரே சென்றார்கள். காட்டுமக்களை வெல்லக் குறைந்த அளவு ஐம்பது துணைவராவது இருத்தல் வேண்டுமென்று கவலைப்பட்டார்கள். இவ்வாறான எண்ணங்களுடன் லெயிட்லியும் ஆங்கிலேய வணிகர் இருவரும் மங்கோ பார்க்கை வழிவிட்டுப் பிரிந்தார்கள்.

## ‘மாடின’ ஊர்

மூன்று நாட்கள் பயணஞ்செய்து [1]மாடின என்ற ஓர் ஊருக்கு மங்கோ பார்க்கும் அவருடன் சென்றவர் களும் வந்தார்கள். அவ்வூரில் ஓராயிரம் குடிசைகள் இருந்தன. அவற்றைச் சுற்றிலும் அரணாகப் புதர்களும் கம்புகளால் ஆன வேலியும் இருந்தன. அஃது ஒரு சிறு நாட்டின் தலைநகர். அதன் தலைவன் தன் இருப்பிடத்தில் ஒரு பாயில் உட்கார்ந்திருந்தான். அவன் மங்கோ பார்க்கை அன்புடன் வரவேற்றான். தன் நாட்டின் வழி யாக அவர்கள் போக ஒப்பங் கொடுத்ததன்றி அவர் களுக்கு ஒரு வழிகாட்டியையும் அமர்த்திக் கொடுத் தான். அவர்கள் புறப்படுமுன் வழியில் அவர்களுக்கு நேரக்கூடிய இடையூறுகளைப்பற்றி எச்சரிக்கை செய்து அவர்கள் கேடின்றிப் போய்வரக் கடவுளைத் தன் வழக் கப்படி போற்றினான்.

1. Madina.

## நீக்ரோ மக்களின் குருட்டு நம்பிக்கை

மாடிஞுவிலிருந்து சிறிது தொலை சென்றதும் ஓர் ஊரில் உணவுக்காக ஓர் ஆட்டைக் கொண்டுவந்தார்கள். அதைக்கொன்று உரித்தவுடன் அதன் கொம்புகளுக்காக நீக்ரோ பணியாட்கள் இருவரும் சண்டையிட்டார்கள். மங்கோபார்க் குறுக்கிட்டு ஆளுக்கு ஒரு கொம்பாகப் பங்கிட்டுக் கொடுத்தார். அந்த வழக்குக்குக் காரணம் வேடிக்கையானது. மேற்கு ஆப்பிரிக்காவில் இருக்கும் நீக்ரோ மக்கள் குருட்டு நம்பிக்கை நிறைந்தவர்கள். கட்டைகள், இலைகள், காகிதங்கள் முதலியவற்றில் குரானை எழுதி முகம்மதியர்கள் விற்பார்கள். அவற்றை நீக்ரோக்கள் வாங்கித் தங்களுக்கு இடர் நேராமலிருக்கும் பொருட்டும், முயற்சிகளில் வெற்றி பெறவும் காப்புகளாக வைத்துக்கொள்வார்கள். ஆட்டுக்கொம்பில் அம்மாதிரி எழுதிவைத்துக் கொள்வதற்காகவே அவர்கள் அவ்வாறு சண்டையிட்டார்கள்.

## மம்போ ஜம்போ

மங்கோபார்க் இன்னுமொரு விந்தையை அவ்வழியில் கண்டார். ஒரு பெரிய மரத்தின் கிளைகளில் பற்பல வேடிக்கையான உடைகள் தொங்கிக்கொண்டிருந்தன. அவையெல்லாம் காட்டுப்பேயான [1]**மம்போ ஜம்போவின்** உடைகளாம். அவ்வூரில் யாராவது ஒரு பெண் தன் கணவனுக்குச் சினமூட்டினால் அவளைப் பலருமறிய மம்போ ஜம்போ தண்டிப்பதாம். அதாவது பலர் அறிய அவள் கணவனாவது வேறு யாராவது மம்போ ஜம்போவின் உடையை அணிந்துகொண்டு

1. Mumbo Jumbo.

அவளைத் தண்டிப்பது வழக்கம். அஃது பெருங் களியாட்டமாம்.

துணி மரம்

அதன்பின் சில நாட்கள் நீரற்ற இடங்களின் வழியாக அவர்கள் பயணஞ்செய்ய நேர்ந்தது. அங்கு ஓரிடத்தில் ஒரு மரம் நின்றது. அதில் வேடிக்கையான இலைகள் நிறைந்திருந்தனவென்று முதலில் அவர்கள் நினைத்தார்கள். அருகிற்சென்று பார்த்ததும் அம்மரத்தின் கிளைகள் கொம்புகள் நிறையப் பலவிதமான துணிக்கந்தைகள் தொங்கிக்கொண்டிருந்தன. ஒரு கால் அருகில் தண்ணீர் இருப்பதைக் குறிக்க முதலில் யாராவது அம்மரத்தில் ஒரு துணியை அடையாளமாகக் கட்டியிருந்திருக்கலாம் அவ்வழி போகும் குருட்டு நம்பிக்கையுள்ள நீக்ரோ மக்கள் ஒவ்வொருவரும், பாலைநிலக் கடவுளுக்குக் காணிக்கையாக ஒரு துணியை அம்மரத்தில் கட்டாமற் போவதில்லை என்ற பழக்கம் நாளடைவில் ஏற்பட்டதுபோலும்.

காபிர்கள்

மங்கோ பார்க்கும் அவருடைய கூட்டத்தாரும் [1]கேம்பியா நதிக்கும் [2]செனிகல் நதிக்கும் இடையேயுள்ள நாட்டில் போகும்பொழுது அவர்களுக்குப் பேரிடர் ஏதும் ஏற்படவில்லை. அங்கே இருண்ட காடு நிறைந்திருந்தது. இரவில் நரிகள் ஊளையிடும் ஓசையும் ஓநாய்களின் ஓசையுமே நிறைந்திருந்தன. அந்த ஓசைகளால் அவர்களுக்கு இரவில் உறக்கம் கிடையாது. பகலில் இடரின்றிப் பயணம் செய்தார்கள். அவர்கள் எதிர்ப்பட்ட [3]காபிர்கள், அஃதாவது முகம்மதியரும் கிறித்

1. The Gambia. 2. The Senegal. 3. Kaffirs.

தவரும் அல்லாத நீக்ரோமக்கள் அவர்களிடம் நட்புடனே இருந்தார்கள். அவர்கள் மங்கோ பார்க் சுங்கம் செலுத்த வேண்டுமென்று ஆங்காங்குச் சொல்லுவார்கள். மங்கோ பார்க் சுங்கத்தொகை மிகுதி என்று சொன்னால் மங்கோ பார்க்குக்கும் காபீர்களுக்கும் சிறு உரையாடல் நடக்கும்.

"நீங்கள் ஏன் இங்கு வந்தீர்கள்," என்று நீக்ரோ தலைவன் கேட்பான்.

"பல புதுமைகளை யறிய"

நீக்ரோ தலைவன் : "அடிமைகள் வாங்கவும் தங்கத்துக்காகவும் நீங்கள் இங்கு வரவில்லையே?"

"இல்லை. நைஜர் நதியைப் பார்க்கவந்தேன்,' என்று மங்கோ பார்க் சொல்லுவார்.

"ஏன், உங்கள் ஊரில் நதிகள் இல்லையா ?" என்று நீக்ரோ தலைவன் கேட்பான்.

### நீக்ரோ மக்கள் அச்சம்

காட்டினரான நீக்ரோ மக்களுக்கு நாட்டினரான மங்கோ பார்க் முதலானவர்களுடைய நோக்கங்களும் பழக்க வழக்கங்களும் புரியவில்லை. அவர்கள் இருவகையாருடைய வாழ்க்கை முறைகளும் முற்றிலும் வேறுபட்டன. அவ்வகை வேற்றுமை, மங்கோ பார்க் உள்நாட்டுக்குள் செல்லச் செல்ல மிகுவதாயிற்று. ஒருநாள் அவர்கள் போய்க்கொண்டிருக்கும்பொழுது நீக்ரோ வீரர் இருவர் குதிரைகளின்மேல் எதிரே வந்தார்கள். அவர்கள் மங்கோ பார்க்கைக் கண்டவுடன் மலைத்து நின்றார்கள். அவரை ஒரு பேய் அல்லது பூதம் என்று நினைத்தார்கள். அவர்களை மங்கோ பார்க் நெருங்கியதும்

அவர்கள் அசைவற்று நின்றுவிட்டார்கள். அவர்கள் ஊருக்குள் மங்கோ பார்க் போனதும் நீக்ரோ குழந்தைகளும், பெண்களும் "கீச்சுக் கீச்" சென்று கத்தினார்கள்.

"நான் பேயும் அல்லன், பூதமும் அல்லன்—நானும் உங்களைப்போல் மனிதன்தான்," என்று சொல்லி மங்கோ பார்க் அவர்களை அமைதிப்படுத்தினார்.

"நீ மனிதனானால் உனக்கு ஏன் வெள்ளைத்தோலும் பெருமூக்கும்? நீ குழந்தையாய் இருந்தபோது உன் தாய் உன்னைப் பாலில் தோய்த்து உன் மூக்கைத் திருகி இருந்தாள்போலும்!" என்றார்கள்.

மங்கோ பார்க் அவர்களுடைய நிறத்தையும் மூக்கையும் புகழ்ந்து பேசினார். அதற்கு அவர்கள், "இனிய சொற்களை நாங்கள் நம்பவேமாட்டோம்," என்றார்கள்.

இத்தகைய நிகழ்ச்சிகளுடன் மங்கோ பார்க், தம்முடன் வந்த பொற்கொல்லன் பிறந்த ஊருக்கு வந்தார். அங்கே அக் கொல்லனுடைய உறவினரும் தாயும் களிக்கூத்தாடிக்கொண்டு அவனை வரவேற்றார்கள்.

அந்நாட்டின் அரசன் மங்கோ பார்க்கை நட்புடன் வரவேற்றான். தன் நட்புக்கு அடையாளமாக ஒரு வெண்காளையையும் சிறப்புப் பரிசாகப் பார்க்குக்குக் கொடுத்தான். அதுவன்றி அடுத்த நாட்டின் எல்லை வரையில் வழிகாட்டத் தக்கதொரு துணைப்படையையும் அமைத்துக்கொடுத்தான்.

### கார்ட்டா நாடு

அடுத்த நாடு [1]கார்ட்டா. அந்நாட்டின் எல்லையில் அந்நாட்டு அரசனுடைய தூதுவன் மங்கோ பார்க்குக்கு

1. Kaarta.

நல்வரவு கூறி அழைத்தான். மங்கோ பார்க்குக்கெனத் தனியாக ஒரு குடிசை ஒதுக்கப்பெற்றது. அந்நாட்டு நீக்ரோவரிற் பெரும்பாலோர் அதுவரையில் வெள்ளை யரைப் பார்த்ததே கிடையாது. ஆதலால் அவர்கள் மங்கோ பார்க்கை நெடுநேரம் வியப்புடன் கூர்ந்து நோக்கினார்கள். அரசன் மங்கோ பார்க்கை அரசவைக்கு அழைத்தான். அவனுடைய இருக்கை, தோலால் மூடப் பெற்ற ஒரு மண்மேடை. அவனுடைய வலப்புறத்தில் போர்வீரர்களும் இடப்புறத்தில் மாதரும் குழந்தை களும் நின்றுகொண்டிருந்தார்கள். அவன் மங்கோ பார்க் கின் வழியில் நேரக்கூடிய இடர்களைப்பற்றிச் சொன் னான். அதனால் மங்கோ பார்க் தம் வழியைச் சிறிது மாற்றிக்கொள்ள முடிவுசெய்தார்.

கார்ட்டாவில் இருந்தபடியே அடுத்த நாட்டு [1]மூர் அரசனை [2]அலிக்கு அவன் நாட்டின்வழியே போகக் கட்டளை கேட்டு அனுப்பினார். அக்கட்டளைக்காகக் காத் திருந்தபோது ஒரு நாள் மூரவீரர்களிற் சிலர் வந்து தங்கள் அரசன் பார்க்கை அழைத்துவரச் சொன்ன தாகக் கூப்பிட்டார்கள். மறுப்பதால் பயனில்லை எனப் பார்க் அறிந்து அவர்களுடன் புறப்பட்டார். அப்போது அலி [3]'பெனவ்ன்' என்னுமிடத்தில் தங்கி யிருந்தான்.

### மூரர்களிடம் சிறை

சில நாட்கள் பயணத்துக்குப்பின் பார்க் அலிமுன் கொண்டுவரப்பட்டார். பார்க்குக்குத் தன் மொழி பேச வியலாது என்று தெரிந்துகொண்ட அலி, பார்க்குடன் பேச முயலவில்லை. பார்க் ஒரு கிறித்தவர்; யாரும் அற்றவர்; அவ்விடத்துக்குப் புதியவர். இக்காரணங்க

1. Moorish King. 2. Ali. 3. Benown.

ளாலும், ஒரு வேளை அவர் ஓர் உளவாளியாய் இருக்கலாம் என்ற ஐயப்பாட்டினாலும் மங்கோ பார்க்கை மூரர்கள் கொடுமையுடன் நடத்தினார்கள். அவரை ஒரு தனிக் குடிசையில் சிறைசெய்தார்கள். அவரிடமிருந்த பொருள்களையெல்லாம் கைப்பற்றிக் கொண்டார்கள். அங்குத் தண்ணீர் கிடைப்பது அரிதாயிற்று பார்க்குக்கு மிகச் சிறிது தண்ணீரே கொடுத்தார்கள். தம்மை உயிருடன் அனுப்புவார்களோ அல்லது தம் உயிரை வாங்கிவிடுவார்களோ வென்ற அச்சம் பார்க்கை எந்நேரமும் வாட்டிக்கொண்டிருந்தது.

## உயிர் தப்புதல்

ஒரு நாள் அலி பார்க்கின் தலையை வெட்டுவதா, கைகளை வாங்கிவிடுவதா, அன்றிக் கண்களைப் பிடுங்கி விடுவதா என்பன பற்றித் தலைவர்களுடன் ஆலோசித்தான். கடைசியாகத் தன் மனைவி [1]பாதிமா சொல்வது போல் செய்வதென்று தீர்மானித்தான். பார்க்கைப் பாதிமா பார்த்து அவர்மீது இரக்கம் கொண்டாள். அவருக்கு நேரவிருந்த கேடுகள் விலகின. அவருடைய உடைமைகள் மறுபடியும் அவருக்குக் கொடுக்கப் பட்டன.

## பிடியினின்று வெளிப்படுதல்

கோடைகாலம் முடிந்து மாரிகாலம் தொடங்கியது. அலி சகாரா பாலைநிலத்தை நோக்கித் தன் இருப்பிடமாகிய வடதிசைக்குப் பயணமானான். அவனுடைய வீரர்களிற் சிலர் தெற்குப் பக்கமாகப் போனார்கள். மங்கோபார்க் அவர்களுடன் கூடப்போக ஏற்பாடு செய்துகொண்டார்.

1. Fatima.

அவர்களுடன் போய்க்கொண் டிருக்கும்போது மூரர்கள் பிடியிலிருந்து தப்பித்துக்கொண்டு போகச் சூழ்ச்சி செய்தார். ஒரு நாள் அதிகாலை நேரத்தில், அவர் தம்மை விடுவித்துக்கொண்டு வெளியேறினார். அவர் கண் இருண்டது. தொண்டை வறண்டது. அவருக்குத் தண்ணீர் வேண்டியிருந்தது. தம் உயிர் போய்விடும் என்று அஞ்சி அவர் கீழே விழுந்தார்; மூர்ச்சித்தார்.

அவர் கண் விழித்து உணர்ச்சி பெற்றபொழுது பொழுது சாய்ந்துவிட்டது. திடீரென்று மழைத் துளிகள் விழுந்தன; தம் துணியை விரித்து மழைத் துளிகளை ஏந்தினார். நனைந்த துணியை வாயிற் பிழிந்து தொண்டையை நனைத்துக் கொண்டார்; புத்துயிர் பெற்றார். "பிழைத்தேன்! பிழைத்தேன்!" என்று எழுந்தார்.

### நைஜர் நதியைக் காணல்

### இறைவனுக்கு நன்றி

அவ்வாறே அவர் தம் பயணத்தைத் தொடர்ந்து நடத்தினார். பல இடங்களுக்குப் பின் [1]பம்பாரா என்னு மிடத்துக்குப் பார்க் வந்து சேர்ந்தார். அங்கே அவருக்கு உணவும் இருப்பிடமும் கிடைத்தன. இரண்டொரு நாட்களில் அவ்வூரிலிருந்து சிலர் [2]செஜோ என்னு மிடத்துக்குப் புறப்பட்டார்கள். மங்கோ பார்க் தாமும் அவர்களுடன் வருவதாகப் புறப்பட்டார். ஆனால் அவர்களுடன் விரைவாகப் போக அவருக்கு இயலவில்லை. அவர் குதிரைக்கும் அவரைச் சுமந்துசெல்ல வலுவில்லை. ஆகையால் அவர்

1. Bambara. 2. Sejo.

த்தம் குதிரையை முன்னே ஓட்டிக்கொண்டு கால் நடையாகவே அவர்களுடன் போனார். அவ்வாறு போய்க்கொண்டிருக்கும்பொழுது, செஜோ நகரம் ஐந்துகல் தொலைவில் இருக்கும்பொழுதே பயணக் கூட்டத்தாருள் ஒருவன், "அதோ [1]பெருநீர்" என்று பெருங் களிப்புடன் கூவினான். [2]வெஸ்ட்மின்ஸ்டர் அருகே உருண்டோடும் [3]தேம்ஸ் நதியைப்போல நைஜர் நதி அலைகளுடன் மின்னிக்கொண்டிருந்தது. பார்க் அதன் கரையருகே விரைந்துசென்று அதன் நீரை அள்ளி அள்ளிக் குடித்தார். மெய்சிலிர்க்க இறைவனை நினைத்து "எல்லாம் வல்ல இறைவனே! பற்பல இடர் களுக்கிடையிலும் என் பயணத்தை நடத்திக்கொடுத்து, நான் இலக்காகக்கொண்ட நைஜர் நதியைக் காணும் பெரும் பேற்றை எனக்கு அளித்த ஐயனே! ஆங்காங்கு உயிரிழக்கும் தருவாயில் நான் இருந்த காலங்களில் எனக்குப் புத்துயிர் அளித்த புண்ணியனே! எனக்கு முன் அநேகர் மேற்கொண்டும் முடிக்க இயலாத பணியை எளியேன் முடிக்கத் துணைபுரிந்த தூயனே! போற்றி! போற்றி!!" எனத் துதித்தார்.

## தாய்நாடு திரும்புதல்

தாம் நைஜர் நதியைக் கண்டபின் பல இடங் களைப் பார்த்துக்கொண்டு கி. பி 1797-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 22-ஆம் நாள் இங்கிலாந்துக்கு வந்து சேர்ந்தார். இரண்டரை ஆண்டுகள் அளவும் அவர் வெளியே யிருந்தார். திரும்பி வந்தபோது அவர் மிகவும் வாடி வதங்கி மெலிந்து போயிருந்தார். அவர் திரும்பி வருவார் என்று எவரும் எதிர்பார்க்க

1. Big Water. 2. Westminster. 3. The Thames.

வில்லை. ஆப்பிரிக்கா கழகத்தின் தலைவரிடம் போய்த் தாம் நைஜரைக் கண்டுவிட்டதாகக் கூறினர். அவர் அவரைப் பெரிதும் போற்றிப் புகழ்ந்தார்.

### மங்கோ பார்க்கின் நூல்—நீக்ரோ மக்களின் ஆதரவு

பார்க் தாம் நைஜர் நதியைக் கண்டறிந்த வரலாற்றை ஒரு நூலாக எழுதினர். அவர் அப் பயணத்தில் நைஜர் நதியின் போக்கு முழுவதையும் கண்டறிந்து வந்திருந்தால் நலமாயிருந்திருக்கும். ஆனல் அவர் உடல் நிலை மிகவும் கெட்டிருந்தது. மூரர்கள் பகைகொண்டிருந்தார்கள். ஆதலால் நைஜரைப் பார்த்ததே போதும் என்று திரும்பிவிட வேண்டியதாயிற்று. தம்முடைய பயணத்தில் நீக்ரோ மக்கள் செய்த உதவியையும், அளித்த ஆதரவையும் மங்கோ பார்க் சிறப்பான நன்றியறிதலுடன் அடிக்கடி எண்ணமிடுவார். செகோ நகரில் நீக்ரோ மக்கள் அவரிடம் அச்சமும் வியப்பும் கொண்டிருந்தார்கள். ஆயினும் அவர்கள் அவர் தங்க இடமும், அவருக்கு உணவும் கொடுத்தார்கள். நீக்ரோ மக்கள் மங்கோ பார்க்கின் பயணவழி முழுதும் அவருக்கு ஒத்தாசையாகவே இருந்தார்கள். அவருக்கு வெப்பு நோய் உண்டானபொழுதெல்லாம் அவருக்கு மருத்துவம் புரிந்து தேற்றினர்கள். அவருடைய உதவியற்ற நிலைக்கு இரங்கி வருத்தப்பட்டார்கள். ஆனல் மூரர்களோ மங்கோ பார்க்கிடம் கடும் பகை பூண்டிருந்தார்கள். அவர்கள் மங்கோ பார்க்குக்கு விளைத்த இன்னல்களுக்கு ஓர் அளவே இல்லை.

### அடிமை வாணிபம்

மங்கோ பார்க் தம்முடைய நூலில் ஆப்பிரிக்காவில் நடந்த அடிமை வாணிபத்தைப்பற்றி விவரமாக எழுதி

யிருக்கின்றார். நீக்ரோ மக்களை அடிமைகளாக்கி விலங்கிட்டுக் கடு வெயிலில் மணல் வழியாகக் கடற்கரைக்கு ஐந்நூறுகல்தொலை நடத்திவரும் கொடுமையை விளக்கியிருக்கின்றார். அவ்வாறு நடந்துவரும் அடிமைகளிற் பலர் வழியில் மாண்டு போவதுமுண்டு. மாண்டு போகின்றவர்களைப் பார்த்து உயிருடன் இருக்கும் அடிமைகள் பொறாமைப்படுவதுண்டாம்.

மங்கோ பார்க் தம்முடைய நூலை முடித்தவுடன் சிலகாலம் மருத்துவராகத் தொழில் நடத்தச் செல்கர்க் அருகில் தங்கினார். ஆயினும் நாடுகாணும் அலுவல் அவரை விடுவதாயில்லை. அவருடைய நூல் ஐரோப்பிய மக்கள் அனைவரையும் ஆட்டிவைத்தது. ஆப்பிரிக்காவை முழுதும் கண்டறியப் பற்பல திட்டங்களை அவர்கள் வகுத்தனர். "நைஜர்நதி கடலில் கலக்கும். அவ்விதமானால் நம்முடைய வாணிபக்கலங்கள் அந்நதி வழியே டிம்பக்டுவுக்குச் சென்று செல்வம் மலிந்த வாணிபத்தை நடத்த இயலும். ஆனால், நைஜர் நதியின் போக்கைக்கண்டு அறிந்து கொடுப்பவர் யார்? பார்க் அதைச் செய்வாரா?" என்று ஆங்கிலேய வணிகர் பெருமக்கள் எண்ணமிட்டனர். அதை அறிந்த இங்கிலாந்து அரசினர் மங்கோ பார்க்குக்கு எழுதினார்கள்.

## இரண்டாம் பயணம்

ஆப்பிரிக்கா காட்டு வெப்புநோய் மங்கோ பார்க்கின் உடலிற் புகுந்துகொண்டது. அவரைவிட்டு அந்நோய் அகலவே இல்லை. ஆதலால், தம் உடல் வருத்தத்துக்குக் காரணமாயிருந்த இடங்களைத் திரும்பப் பார்க்க மங்கோ பார்க் எதிர்பார்த்தவரல்லர். ஆனால், அரசினரே வாய்ப்பு அளித்தபோது மீறமுடியாத

ஆவல் அவரைப் புறப்படத் தூண்டியது. ஆகவே அரசினருடைய ஆணையின்படி நாற்பது மக்களுடன் 1805-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் ஆப்பிரிக்காவை நோக்கிப் புறப்பட்டார்.

அரசினரும் மற்றவர்களும் மங்கோ பார்க் தன்னந் தனிமையில் ஒருவராய்ச் செய்யத் தொடங்கிய செயலைப் பலருடன் கூடி அவர்களுடைய துணைகொண்டு போகும்போது செய்துமுடிப்பார் என்று முற்றும் நம்பினார்கள். அவருடைய ஆண்மையிலும் கால மறிந்து நடக்கும் ஆற்றலிலும் எவருக்கும் ஐயப்பாடே கிடையாது.

அவர் துணிபு

மங்கோ பார்க் "என்னுடன் வரும் ஐரோப்பியர் ஒவ்வொருவராக மடிந்துபோனாலும், நானே அரை வாசி மடிந்துபோனாலும், நான் மேற்கொண்ட பணியை விடாது தொடர்ந்து நடத்துவேன். என் பயணத்தின் நோக்கத்தை நிறைவேற்ற முடியாமற்போனால், இறுதி யில் நைஜர்நதியில் மடிந்தாலும் மடிவதேயொழிய வீணாகத் திரும்புவதில்லை,;' என்று உறுதிகூறிக் கொண்டார்.

பழைய நண்பர்கள்

மங்கோ பார்க் மகிழ்வும் ஊக்கமும் நிறைந்து ஆப் பிரிக்காவுக்குள் நுழைந்தார். தம்முடைய பழைய நண்பர்களைக் கண்டு தம்மை அடையாளம் சொல்லிக் கொண்டார். அவர்களுக்காகத் தாம் கொண்டுவந் திருந்த பரிசுப்பொருள்களை எடுத்துக்கொடுத்தார். எல்லாம் செவ்வனே நடைபெற்றன. ஆயினும், வெப்புநோய் அக்கூட்டத்தினரைப் பற்றியது. பார்க்

கின் துணைவர்கள் ஒவ்வொருவராய் மடிந்தார்கள். பார்க்கும் நோயால் மெலிந்தார். "என் துணைவர்கள் எல்லோரும் இறந்துபோனாலும், நானே குற்றுயிரா யிருந்தாலும் நான் முன்னேறிப் போவேனே தவிர, திரும்பமாட்டேன்," என்று சொல்லிக்கொண்டார்; நைஜர்நதியை அடைந்ததும் அரசினருடைய கட்டளைப் படி நதியின் போக்கில் ஒரு படகில் போனார்.

## நைஜர் தோன்றுமிடம்

[1]சையேர்ரா லியோனும் [2]பிரெஞ்சுகினியாவும் கூடுமிடத்தில் ஒரு சிறு ஊற்றுத் தோன்றுகிறது. அச்சிறு ஓடை துளிர்த்துக்கொண்டு கீழ்த்திசை நோக்கித் திரும்புகின்றது; பெரிதாகின்றது. திடீரென்று வடதிசை நோக்கித் திரும்பிப் பல படகுகளுக்கு நீர்வழி யாகின்றது. பின் டிம்பக்ட்டூ பக்கம் திரும்பி நிறை நீருடன் மறுபடியும் கிழக்கே திரும்புகின்றது. டிம் பக்ட்டூவுக்கு அப்பால் அது பாறைகளாலும், தீவுக ளாலும், பலசிறு பிரிவுகளாகச் சிதறுகின்றது. அத்தடை களால் நுரையுடன் பேர் இரைச்சலுடன் நைஜர் நதி சுழித்து ஓடுகின்றது. அவ்விடத்தில்தான் மங்கோ பார்க்கின் இறுதிச்சொல்லான "தாம் நைஜரில் மாண்டு போவதென்பது" நிறைவேறியது.

## பார்க் மறைதல்

அங்கே திடீரென்று மூரர்களுக்கும் பார்க்குக்கும் சண்டை மூண்டது. நைஜர் நதியிலேயே சண்டை தாம் தனியாகச் சமாளிக்கமுடியாத நிலையில் மங்கோ பார்க் நைஜரில் குதித்து மறைந்துபோனார்.

---

1. Sierra Liene. 2. French Guinea.

### நைஜர் கடலில் சேருமிடம்

அவ்விடத்திலிருந்து நதி தெற்கே திரும்பி மறுபடி யும் கிழக்கேபோய்ப் பின்னர் தெற்கே போய்க் கினி குடாவில் சேர்கின்றது.

மங்கோ பார்க் இங்கிலாந்தைவிட்டுப் புறப்பட்டு ஐந்து ஆண்டுகட்குப்பின் [1]செனிகல் மாகாண கவர்னர், பார்க்குடன் பயணஞ்செய்த இரு நீக்ரோ மக்களைக் கண்டுபிடித்துக் கேட்க உண்மை தெரிந்தது.

### இற்றைநாள் ஆப்பிரிக்கா

இற்றைய நாளில் வெள்ளை வணிகர்கள் நைஜர் நதியில் போய் வருவது இயல்பாக இருக்கின்றது. டிம் பக்ட்டூவிலிருந்து [2]சகாரா பாலையைத்தாண்டி [3]ஆல்ஜி யர்ஸ்க்கு இந்த நாளில் மோட்டாரில் போக இயலும், வான ஊர்திகளிலும் செல்லலாம். நைஜர்நதியின் குறுக்கே ஆங்கிலேயரால் கட்டப்பெற்ற பாலம் ஒன்று இருக்கின்றது.

### பார்க் நினைவுக்குரிய சின்னங்கள்

அதில் "மங்கோ பார்க்கின் நினைவாக..." என்ற சொற் கள் பொறிக்கப்பெற்றிருக்கின்றன. அப்பாலத்தின் கீழ் [4]ஜெப்பாத்தீவில், யாருமறியாத இடங்களைத் தன்னந் தனியாகக் கண்டறிந்து அந்நாட்டின் செல்வத்தையும் பெருநீர் வழியையும் மேல் நாட்டாருக்கு வெளிப் படுத்தி, அந்நாட்டில் நாகரிக வித்துக்களை ஊன்றிய பார்க் வீரருக்கு, நினைவுச் சிலைகள் உள்ளன.

செல்கர்க் நகரின் சந்தையிடத்தில் ஓர் உயர்ந்த மேடையில் மங்கோ பார்க்கின் உருவச்சிலை தலைநிமிர்ந்து

---

1. Senegal. 2. Sahara. 3. Algiers. 4. Jebba.

நிற்கின்றது. மங்கோ பார்க்கின் நூலிலிருந்து எடுத்த நான்கு உருவங்களை அவர் சிலையின்கீழ்ச் சித்திரித்திருக்கின்றார்கள். அவை: அழுது நிற்கும் ஓர் அடிமைப் பெண், ஒரு பாடக நாடோடி, ஒரு தாயும் அவள் குழந்தையும், மூடநம்பிக்கை பறைசாற்றுதல் என்பன. அவற்றுடன் மங்கோ பார்க்கின் பயணத்தில் நேர்ந்த இரு நிகழ்ச்சிகளையும் சித்திரமாகச் செதுக்கியிருக்கின்றார்கள். ஒன்று, மங்கோ பார்க் பசியால் அலைந்து நோயால் வாடியபோது நீக்ரோ மாதர் இரக்கங்கொண்டு அவரைத் தேற்றி ஆதரித்தது; இரண்டாவது, மங்கோ பார்க் முதன் முதல் நைஜர் நதியைக்கண்ட களிமிகும் காட்சி.

---

## உ. [1]டேவிட்ஸ் லிவிங்ஸ்டன்

### இளமையும் கல்வியும்

நாடுகண்டறிவதில் வணிகர்களே யன்றி, [2]கிறித்தவ சமய இயக்கத்தார்களும் மேனாட்டில் முனைந்தார்கள். டேவிட்ஸ் லிவிங்ஸ்டன் கிறித்தவ சமய இயக்கத்தைச் சேர்ந்த ஒருவர்.

[3]டேவிட் [4]ஸ்காட்லந்தில் பிறந்தார். பத்தாண்டு நிரம்பு முன்னரேயே வயது வந்தவர்கள் ஏற்கவேண்டிய குடும்பப் பொறுப்பு அவரை வருத்தலாயிற்று. அவரை யொத்த சிறுார்கள் அங்கும் இங்கும் ஆடிக்கொண்டிருந்த பிள்ளைப் பருவத்தில் டேவிட் தம் குடும்பத்துக்கு ஊதியந் தேடவேண்டியவரானார். பொழுது புலருமுன் உறக்கந் தெளிந்து, வான் வெளுக்கு முன்னேயே உடுத்திக்கொண்டு தாம் வேலை செய்த பஞ்சாலைக்குப் போய் விடுவார். அப் பஞ்சாலை அவரது பள்ளியுமாயிற்று; அஃது ஒரு சிறந்த பள்ளியே! அவருடைய ஊழியம் காலை ஆறுமணிக்குத் தொடங்கும். பஞ்சாலையில் வேலைசெய்துகொண்டே [5]லத்தீன் மொழியின் இலக்கணத்தை மனப்பாடஞ் செய்வார் அவர்.

இரவு எட்டுமணிக்குத் தமது இலக்கணப் புத்தகத்தை மூடிவைத்து ஓர் இரவுப் பள்ளிக்குப் போய் விடுவார். அங்கே பத்துமணிவரையில் படிப்பார். அவருக்கு மிக விருப்பமானது [6]தரைநூல். தரைநூலில் கூறப்படும் ஒவ்வொன்றும் அவருக்கு ஒரு விந்தையாகவே இருந்தது. தரைநூல் கூறும் இடங்களை எல்

---

1. David Livingstone. 2. Missionaries. 3. David 4. Scotland. 5. Latin. Geography.

லாம் போய்ப் பார்ப்பதாகவும், உலகின் அழகு அனைத்தையும் கண்ணாரக் காண்பதாகவும் அவர் தம்முடைய மன உலகில் மகிழ்ந்தார் அவ்வாறு தரைநூல் கற்கையில் உலக படத்தில், சில இடங்களில் [1]“கண்டறியப் படாதது” என ஆங்காங்குக் குறிப்பிட்டிருந்ததை அவர் கண்டார். அவ்வாறு எழுதியிருந்தது அவருக்கு மிகுந்த ஆத்திரத்தை விளைவித்தது.

அவ்வாறு குறிப்பிட்டிருந்த இடங்களுள் [2]ஆப்பிரிக்காவும் ஒன்று. அதுபற்றி டேவிட் மிகவும் மனம் துடித்தார்.

“ஆப்பிரிக்கா ஏன் அறியப்படாதிருக்கவேண்டும்? அதை இருள் சூழ்ந்து இருப்பானேன்? அங்கு எத்தகைய மக்கள் வாழ்கின்றார்கள்? என்னைப்போல் உடல் வளம்பெற்ற இளைஞர் வேலைசெய்துகொண்டே லத்தீன் படிக்கக்கூடிய தொழிற்சாலைகள் உளவோ?” என்றெல்லாம் டேவிட் எண்ணமிடலானார்.

இந்த எண்ணங்களால் அவருடைய மனத்தில் மகிழ்ச்சி தோன்றியது. தாம் ஆப்பிரிக்காவுக்குப் போவதென முடிவு செய்தார். தாம் சென்றால் ஆப்பிரிக்காவைப்பற்றி எல்லா விவரங்களும் தெரியவரும். அதற்குப் பிறகு அது “கண்டறியப்படாத நாடாக” இருக்காது. அங்குள்ள மக்களுக்குப் படிக்க வசதிகள் இல்லாவிடில் அவரே அவர்களுக்குக் கற்பிப்பார். அவர் தம் தாய்க்குத் தொண்டு செய்ததுபோலவே ஆப்பிரிக்க மக்களுக்குப் பணியாற்றுவார் அவர்களுடைய வாழ்க்கை நலனை முன்னிட்டு அவர்களை நன்னெறியிற் செலுத்துவார். அவர்கள் நோயுற்றால் மருத்துவராக

1. Unexplored. 2. Africa.

இருந்து மருந்து கொடுத்து நோயைத் தீர்ப்பார். அதற்காக [1]மருத்துவக் கலையையும் அவர் பயில்வார்.

இவ்வாறு எண்ணமிட்டுக்கொண்டே வீட்டுக்கு ஓடுவார். வீட்டிலும் நடுநிசிவரை மங்கிய விளக்கொளியில் படிப்பார் அன்றாடம் அவருடைய தாயார் வந்து அவருடைய புத்தகத்தைப் பிடுங்கினால் ஒழிய அவர் படிப்பை நிறுத்தமாட்டார்.

ஆப்பிரிக்கா பெரும்பாலும் ஒருவராலும் அறியப் படாத நாடாகவே இருந்தது. வாஸ்கோடகாமா முதலியவர்களுடைய முயற்சியால் ஆப்பிரிக்காவின் கடற்கரையோரங்களில் மக்கள் குடியேறினார்கள். ஆயினும், அக்குடியேற்ற நாடுகள் எல்லாம் பெருங் கடலில் சிறு தீவுகள் போன்றே இருந்தன. மன உறுதி படைத்த சிலர் ஆப்பிரிக்காவுக்குள் துணிந்து போனதும் உண்டு. அவர்களுள் [2]மங்கோ பார்க்கும் ஒருவர்; ஆனால் அவர் உயிருடன் திரும்பவில்லை. ஆப் பிரிக்கா வெள்ளையரின், கல்லறையாகவே தோன்றியது.

பயணம்

டேவிட் லிவிங்ஸ்டன் 1841-ஆம் ஆண்டு ஆப்பிரிக் காவின் தென்முனையில் உள்ள கேப்டவுனில் இறங்கிய பொழுது அவருக்கு அதுவரை ஆப்பிரிக்காவைக் கண் டறியச் சென்றவர்கள் பட்டபாடுகள் யாவும் தெரியும். ஆயினும் அவருக்கு அதுவரையில் தெரியாத புதுமை யொன்றை அவர் அங்குக் கண்டார். அஃது அவ ருடைய மனத்தை முறித்தது! அவருடைய கண்கள் கலங்கின! அதுதான் [3]அடிமை வாணிபம். நாள்தோறும் விலங்கிட்ட அடிமைகள் வரிசை வரிசையாகக் காட்டி

1. Medicine. 2. Mungo Park. 3. Slave Trade.

லிருந்து கொண்டுவரப்பட்டார்கள். ஆண்கள், பெண்கள், குழந்தைகள் கூட அவ்வாறு அடிமைகளாக விலைப்பட்டார்கள். அவர்களை, விலைப்படுத்தியவன் அவர்களுடைய தலைவன். அவன் அவர்களை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். கேட்பாரில்லை! நம் நாட்டில் ஆடுமாடுகளை நாம் பயன்படுத்துவதுபோல அக்காலத்தில் அடிமைகளைப் பயன்படுத்தினார்கள் அவ்வாறு அங்கே அடிமைகளைப் பிடித்து விற்பது சட்டத்துக்கு முரண்பட்டது. ஆதலால், அடிமைகள் நிறைந்த கப்பல்களை அரசினர் தொடர்வதாகத் தெரியவந்தால், அடிமை வணிகர்கள், அக்கப்பல்களை அப்படியே நீருக்குள் மூழ்கடித்து விடுவார்கள். என்னே கொடுமை! பல்வகைக் கொடுமைகளிலிருந்தும் அடிமைகள் தப்பும் வழி ஒன்றுதான் இருந்தது. அஃதாவது, அவர்கள் நோயடையவேண்டும்; நோயடைந்தால் அவர்கள் பயன்படமாட்டார்கள். ஆதலால் அவர்களுடைய தலைவர்கள் அவர்களைக் கடலில் எறிந்து விடுவார்கள். இவற்றையெல்லாம் காணவும் கேட்கவும் லிவிங்ஸ்டனுடைய மனம் புழுங்கியது; நடுக்கமுற்றது.

ஆனாலும், அடிமைத் தொழிலை ஒழிக்கத் தம்மால் இயன்றதைச் செய்யத் துணிந்தார்.

### பேச்சுவானா நாடு

லிவிங்ஸ்டன் கேப்டவுனிலிருந்து புறப்பட்டு வடக்கே சென்றார். [1]பெச்சுவனாட்டில் [2]குருமான் என்னுமிடத்தில் [3]டாக்டர்மாபெட் என்பவருடைய [4]சமய நிலயத்துக்கு வந்து சேர்ந்தார். அங்கே மக்கள் நோயடைந்து வருந்துவதையும் அநாகரிகத்தில் அவர்

1. Bechuanaland. 2. Kuruman. 3. Doctor Moffat
4. Missio Station.

கள் மூழ்கியிருப்பதையும் கண்டார். ஆயினும், அவர்களிடம் மனத்தூய்மையும், அறிவுவளமும், நன்னடத்தையும் இயல்பாகக் குடிகொண்டிருந்ததை டாக்டர் லிவிங்ஸ்டன் கண்டார். அவர்களுக்குக் கல்வி கற்பித்து அவர்களைச் சீர்திருத்திஞல் அவர்கள் மேன்மையடைந்துவிடுவார்கள் என்று லிவிங்ஸ்டன் எண்ணிஞர். அங்கே பற்பல இடங்களுக்குச் சென்று சமயபோதனை செய்துகொண்டும், நோயாளிகளுக்கு மருந்து கொடுத்துக்கொண்டும் அந்நாட்டு மொழியைப் பயின்ருர். அங்குள்ள மரம் செடி வகைகளையும் விலங்கினத்தையும் பற்றி ஆராய்ந்து அவைபற்றிய விவரங்களை அறிந்து கொண்டார். நாட்டு மக்களுடன் இனிய சொற்கள் பேசி, அவர்களுடைய பயிர்த்தொழிலைப் பெருகச் செய்தார் அதுவன்றிப் புதிய செடிகளைப் பயிர்செய்யும் முறையையும் அவர்களுக்குக் கற்றுக் கொடுத்தார். ஆஞல், அவர்கள் "மழையின்றிப் புதிய செடிகளைப் பயிர்செய்வ தெவ்வாறு? நீயும் [1]மழையழைப்போஞ?" என்று கேட்டார்கள். அம்மக்களுக்குள் முதன்மையானவர்களுள் மழையழைப்போன் ஒருவன். அவன் வௌவால்கள், நரிகளின் ஈரல், குரங்குகள், சிங்கங்கள் இவற்றின் இதயங்களைப் பொசுக்கி மந்திரங்களை ஓதி மழையழைப்பதாகச் சொல்வான். அதஞல்தான் அவர்கள் டேவிட் லிவிங்ஸ்டனைப் பார்த்து அவ்வாறு கேட்டார்கள்.

அதைக்கேட்ட டேவிட் லிவிங்ஸ்டன் தாமும் மழை வரவழைப்பதாகச் சொன்ஞர். அவர் "நீங்கள் இனி மழையழைப்போனை நாடவேண்டுவதில்லை," என்று சொல்லி, அவர்கள் ஊருக்கு ஒரு கல் தொலைவி

1. Rainmaker.

லிருந்த ஆற்றிலிருந்து கால்வாய்கள் வழியாக நீர் பாய்ச்சக் கற்றுக்கொடுத்தார்.

அங்கே பிறர்பணி யாற்றிக்கொண்டு இரண்டு ஆண்டுகள் கழித்தார். 1844-ம் ஆண்டில் டாக்டர் பாஸட்டின் மகளான மேரியை மணந்துகொண்டார்;

தொண்டுகள்

லிவிங்ஸ்டனுடைய கண்காணிப்பில் [1]ஹாடெண்டோட்க்கள் என்னும் அவ்வினத்தார் பெருநன்மைகளைப் பெற்றார்கள். அவருடைய தொண்டுகளில் அவர்கள் மனம்மகிழ்ந்தார்கள். லிவிங்ஸ்டன் சும்மாவிருந்ததே இல்லை. அவர் தச்சுவேலைகள் செய்தார்; தோட்டம் அமைத்தார்; ஆசிரியராயிருந்தார்; மருத்துவராய் மருந்தும் கொடுத்தார். அவருடைய மனைவியான மேரியும் அவருடைய தொண்டுகளில் துணைபுரிந்தார். மேரியம்மை தோட்டத்தைப் பார்த்துக்கொண்டு சமையலும் செய்தார். அதுவன்றி அந்த நாட்டுப் பெண் மக்களுக்குத் தையல் வேலையும் கற்றுக்கொடுத்தார். அவர்கள் லிவிங்ஸ்டனை "ஐயா" "ஐயா" என்று அழைத்தார்கள். அவர்களுடைய அன்பு எல்லாம் உருண்டு திரண்டு அந்த ஒரு சொல்லாக வெளிப்பட்டது. லிவிங்ஸ்டன் தாம் அவர்களுடைய தோழனே யொழிய எவ்வகையிலும் அவர்களுக்கு மேம்பட்டவரல்லர் என்று எவ்வளவு சொல்லியும் அவர்கள் அவரை ஒரு தலைவராகவே மதித்துப் பணிவும் பரிவும் காட்டினார்கள்.

நாளடைவில் ஹாடெண்டோட்க்கள் என்னும் அந்த இனத்தார் நாகரிகத்திலும், அறிவு வளத்திலும்

1. Hotten tots.

மிகவும் மேன்மை யடைந்தார்கள். அது கண்ட லிவிங்ஸ்டன் தம்முடைய பணிகளை இன்னும் தொடர்ந்து நடத்த வடக்குநோக்கிச் செல்ல விரும்பி ஞர். அதை யறிந்த ஹாட்டெண்டோட்க்கள் அமைதி யிழந்தார்கள், அச்சமும் அடைந்தார்கள். அவர்கள் லிவிங்ஸ்டனை அணுகி "ஐயாவே எங்களுடனே தங்கிவிடுங்கள். வடக்கில் உள்ள பெச்சுவாஞ மக்கள் மிகக் கொடியவர்கள். அவர்கள் உங்களுக்குத் தீங்கு இழைப்பார்கள்," என்று சொன்ஞர்கள்.

லிவிங்ஸ்டன் வருத்தத்துடன் தமது தலையை அசைத்துத் தாம் அவர்கள் கருத்துக்கு உடன்படாமையைத் தெரிவித்தார். "பெச்சுவாஞ இனத்தாரை உங்களுக்குத் தெரியாது அதனுலேதான் அவர்களிடம் அச்சப்படுகின்றீர்கள். உங்கள் அக்கம் பக்கத்தார்களைப்பற்றி நீங்கள் அறிந்துகொண்டால் அவர்களைக் கண்டு அஞ்சமாட்டீர்கள்," என்ருர். அதைக் கேட்ட அவர்கள் "நீங்கள் இங்கே தங்க மறுத்தால் எங்ளுட் சிலர், உங்களுக்குத் துணையாக உங்களுடன் வருவோம். நாங்கள் எங்கள் உயிரைக் கொடுத்தும் உங்களைக் காப்பாற்றுவோம்," என்ருர்கள்.

அதற்கு லிவிங்ஸ்டன் உடன்பட்டார். நூறு கல் தொலைவு நடந்து லிவிங்ஸ்டனும் கூட்டத்தாரும் பெச்சுவாஞ இனத்தார் வாழ்ந்த ஊருக்கு வந்தார்கள் அங்கு அவ்வூர்த் தலைவனுடைய மகள் தீராத நோய் அடைந்திருந்தாள். அவ்வூர் மருந்துகளும் மந்திரங்களும், மூலிகைகளும், நோயைத் தீர்க்கவில்லை. லிவிங்ஸ்டன் மருந்து கொடுக்கவே நோய் தீர்ந்தது. தன் மகள் உடல் நலமடைந்ததைக் கண்ட அத்தலைவன் லிவிங்ஸ்டனிடம் மிகுந்த நன்றி பாராட்டி

ஞன். அவனுடைய நன்றியறிவுக்கு ஓர் எல்லையே இல்லை. இருவருடைய நட்பும் வளர்ந்தது. அவர்கள் இருவரும் ஆப்பிரிக்கா நாட்டு மக்களிடையே அமைதியை ஏற்படுத்துவதைப்பற்றி நெடுநேரம் பேசுவார்கள். ஆடுமாடுகள் மேயும் அமைதியான புல்வெளிகளில் அவர்கள் இருவரும் அதிகாலை நேரத்தில் உலாவி வருவார்கள். நீர்க்குடத்தைத் தலையில் வைத்துக்கொண்டு ஒய்யாரமாக ஆற்றிலிருந்து நடந்துவரும் மகளிர் கூட்டத்தைக் கண்டு அவர்கள் மகிழ்வார்கள்.

பெச்சுவாஞ நாட்டுக்கு வடக்கே [1]கலஹாரி பாலைநிலமும் அதற்கப்பால் [2]ஸுலூ மக்கள் நாடும் இருந்தன. லிவிங்ஸ்டன் அவர்கள் ஊருக்குப் போய்த் தம் பணிகளைச் செய்ய விரும்பினார். ஆனால், பெச்சுவாஞ தலைவன் அவரைப் பார்த்து, "நீங்கள் ஸுலூ ஊருக்குப் போகலாகாது. அவர்கள் மிகக் கெட்டவர்கள்," என்றான். லிவிங்ஸ்டன் ஹாடெண்டோட்க்களுக்குக் கூறியதுபோலவே பெச்சுவாஞ தலைவனுக்கும் கூறித் தாம் ஸுலூ நாட்டுக்குக் கட்டாயம் போய்த்தீர வேண்டுமென்று முடிவாகச் சொல்லிவிட்டார்.

ஒருநாள் லிவிங்ஸ்டனுக்கு ஸுலூ தலைவனிடமிருந்து அழைப்பு ஒன்று வந்தது. ஸுலூ தலைவன் லிவிங்ஸ்டனைத் தன்னூருக்கு வரவேண்டுமென்று அழைத்தான். அப்படி வர அவர் மறுத்தால் தான் லிவிங்ஸ்டன் இருக்கும் இடத்துக்கு வந்து அவரைப் பார்ப்பதாகச் சொல்லியனுப்பியிருந்தான்.

அச்செய்தி கேட்ட லிவிங்ஸ்டன் மிகவும் மகிழ்ந்தார். ஆதலால், உடனே ஸுலூ நாட்டுக்குப் போகப்

1. Kalahari Desert. 2. Zulus.

புறப்பட்டார். தெரியாத நாடுகளின் வழியாகப் பாலை நிலத்தைக் கடந்து, பகைவர்கள் இருந்த இடங்களைத் தாண்டி லிவிங்ஸ்டனும் துணைவரும் பயணஞ் செய்ய வேண்டியிருந்தது. சிற்சில இடங்களில் அவர்களுக்குத் தண்ணீர் கிடைப்பது அரிதாயிற்று. ஆனால், அடிக்கடி அவர்களுக்கு மூலாம் பழங்கள், மணமிகு மலர்கள் இவைகள்கூட ஏராளமாகக் கிடைப்பதுண்டு. இரவில் நீர் அருந்த வரும் யானைக்கூட்டங்கள் பிளிறுவதை அவர்கள் கேட்பதுண்டு. அவர்கள் தங்கள் வழியில் [1]நெருப்புக்கோழி [2]காண்டா மிருகம் முதலிய விந்தையான விலங்கினங்களைக் கண்டார்கள்.

அவர்கள் ஒருவகை ஈயின் தொல்லைக்கு அஞ்சி வழிமாற வேண்டியதாயிற்று. [3]ஸெட்ஸி ஈ எனப்படும் அந்த ஈ ரீங்காரம் செய்வதை ஒருதரம் கேட்டவர்கள் அதை மறக்கவே முடியாது. அஃது இயல்பான வீட்டு ஈயைவிடப் பெரிதன்று; தேனீயைப்போலப் பழுப்பு நிறமானது; அதன் உடலின் குறுக்கே மஞ்சட்கோடுகள் இருக்கும். அது கடித்தால் மக்கட்கும் காட்டு விலங்குகட்கும் ஊறு உண்டாகாது. எனினும், அதன் கடியால் எருது, குதிரை, நாய் முதலியன மடிவது திண்ணம்.

அத்துணை இடையூறுகளிடையே லிவிங்ஸ்டனும் கூட்டத்தாரும் வழிநடந்துகொண்டிருந்த காலத்தில் ஸுலூ மக்களின் தலைவனை [4]ஸெபுச்சுவேன் என்பவன், லிவிங்ஸ்டனுடைய வருகையைக் கேட்டறிந்து, அவரை வரவேற்க நூறுகல் தொலைக்குமேல் பயணஞ்செய்து எதிர்கொண்டான். அவன் அதற்கு முன்னரே தன்

1. Ostrich. 2. Rhinoceros.
3. Tsetse Fly. 4. Sebituane.

ஆட்களை அனுப்பி லிவிங்ஸ்டன் தங்குவதற்கு ஓர் இடத்தை ஆயத்தஞ் செய்திருந்தான். லிவிங்ஸ்டன், தென் ஆப்பிரிக்காவின் மாப்பெரு வீரனான ஸெபுச்சு வேனைக் கண்டபொழுது, அவனுடைய ஏற்பாடுகளைக் கண்டு திகைத்துப்போனார்.

ஸுலூ இனத்தாரை லிவிங்ஸ்டன் கண்ட பொழுது அவர்களிடம் அவருக்குப் பெருமதிப்பு உண்டாயிற்று. அவர்கள் நேர்மையும் உண்மையான உழைப்பும் மிகுந்தவர்கள் என்பதை அவர் அறிந்து பாராட்டினார். உலோகங்களில் அவர்கள் செய்யும் வேலைகளின் திறனைப் பெரிதும் போற்றினார். ஸுலூ இனத்தாருக்கு அருகில் வாழ்ந்த புதர்மக்கள் களியாட்டம் மிகுந்தவர்கள். அவர்கள் நகைச்சுவை நிறைந்தவர்கள். "நாடு அழகிலும், வளத்திலும் சிறந்ததே. மக்களும் பெருங்குடியினரே—ஆயினும் அங்குப் பரவியிருக்கும் குளிர்காய்ச்சல் மட்டும் ஒழிந்தால் நலமாகும்," என லிவிங்ஸ்டன் அவ்வப்போது எண்ணுவதுண்டு.

லிவிங்ஸ்டனுடைய ஆப்பிரிக்க நண்பர்கள் அவரை மிகவும் மேன்மையாக மதித்து நன்கு விரும்பினர். அவர்கள் அவரை வழிபடக்கூட ஆயத்தமாயிருந்தார்கள். அவருடைய பெயரும் புகழும் மின்னொளிபோல ஆப்பிரிக்காவின் மூலை முடுக்குகளில் கூடப் பரவியது. "டாக்டர் லிவிங்ஸ்டன்-ஆப்பிரிக்கா" என்று முகவரியிட்டு எழுதினாலே போதும். கடிதம் அவரிடம் சேர்ந்துவிடும்! லிவிங்ஸ்டன் காய்ச்சலால் மாண்டிருப்பாரோ வெனக் கேப்டௌனில் இருந்த நண்பர்கள் ஐயப்பட்டார்கள். தங்கள் ஐயத்தைச்

சோதிக்க லிவிங்ஸ்டனுக்கு ஒரு கடிதம் மட்டும் யாரிடமாவது அவர்கள் கொடுத்திருந்தால் போதும். ஓர் இனத்தாரிடமிருந்து மற்ருே ரினத்துக்கும் அங்கிருந்து லிவிங்ஸ்டன் இருந்த இடத்துக்கும் மாற்று அஞ்சலில் கடிதம் கட்டாயம் போய்ச் சேர்ந்துவிடும். ஆப்பிரிக்க மக்கள் அனைவர்க்கும் தெரிந்தவர் லிவிங்ஸ் டன்.

இத்தகைய பெருமையுடனிருந்த லிவிங்ஸ்டன் ஸுலூ இனத்தாரிடைச் சென்றவுடன் அவர்கள் எல்லோரும் ஒரு திருவிழாக் கொண்டாட ஆயத்தமாயிருந்ததுபோலக் களிப்புடன் இருந்ததைக் கண்டார். அங்கே ஆடலும் பாடலுமாக இருந்தது. எல்லோரும் லிவிங்ஸ்டனைக் கண்டு எல்லையற்ற மகிழ்வடைந் தார்கள்.

இவ்வாறு லிவிங்ஸ்டன் ஆப்பிரிக்காவில், அதற்கு முன் வெள்ளையர் எவருமறியாத இடங்களை எல்லாம் பார்த்து அறிந்துகொண்டே போஞர். பார்த்த இடங் களின் படக் குறிப்புகளை எழுதிக்கொண்டும், புத்தம் புதிய காட்சிகளையும் இடங்களையும் தேடிக்கொண்டும் இருந்தார்.

ஒருநாள் லிவிங்ஸ்டனும் அவருடைய துணைவர் களும் ஓர் ஆற்றைக் கண்டார்கள். அதன் பெயர் [1]ஸாம்பெஃஸி என்று ஸுலூ மக்களின் தலைவன் சொன் ஞன். அந்த ஆற்றைக் கண்டதும் அதன் போக்கைக் கண்டறிய ஆவல்கொண்டார். உடனே படகுகளில் அவர்கள் ஆற்றை எதிர்த்துப் போஞர்கள். அதன் இரு கரைகளிலும் பூங்கொடிகள் தரையை மூடிக்கொண்

1. Zambezi

டிருந்தன. வானை அளாவிய பனைமரங்களும் இதர மரங்களும் நிறைந்திருந்தன. அந்தக் காட்சிகளை யெல்லாம் பார்த்துக்கொண்டே ஆற்றின் எதிர்ப்புறமாகப் போய்க்கொண்டிருந்தார்கள். அங்கு ஓரிடத்தில் ஐந்து வரிசைகளில் நீராவி வானைநோக்கிச் செல்வது போன்றிருந்தது. ஒரு பேரொலி அவர்கள் காதில் கேட்டது. அந்நாட்டு மக்கள் அதை [1]"ஒலிப்புகை" என அழைத்தார்கள்.

லிவிங்ஸ்டன் மெதுவாக அந்த இடத்துக்குச் சென்றார். அஃது ஒரு நீர்வீழ்ச்சி. அதுதான் ஸாம்பெஃஸி பிறப்பிடம், அங்கே ஆறாயிரம் அடி உயரத்திலிருந்து செங்குத்தான அருவியாக அவ்வாறு விழுவதைப் பார்த்தார். அதற்கு அக்காலத்து இங்கிலாந்து அரசியாரான விக்டோரியாவின் பெயரை இட்டு [2]"விக்டோரியா நீர்வீழ்ச்சி," என அழைத்தார். லிவிங்ஸ்டன் மீண்டும் தமது பயணத்தைத் தொடங்கினார்; பெருமழையால் நிலம் மிகவும் பாழ்பட்டிருந்தது; யானைகளும், எருமைகளும் அவர்களைத் துன்புறுத்த முயன்றன; எனினும் இத்தொல்லைகளால் லிவிங்ஸ்டனுடைய உறுதி குன்றவில்லை; கொடிய விலங்குகள் ஒன்றோடொன்று போரிடுவதையும், காட்டுயானைகள் விரைவான ஆறுகளை அச்சமின்றிக் கடப்பதையும், தமது ஆப்பிரிக்க நண்பர்கள் தம் கூட்டத்தவரை எதிர்த்து வரும் விலங்குகளை விரட்டுவதையும் காண அவருக்கு ஊக்கம் மேன்மேலும் பெருகலாயிற்று. செல்லும் வழியில் பல ஏரிகளையும், மலைத்தொடர்களையும், ஆறுகளையும் கண்டார். அவ்வப்பிரிவில் இருந்த சிறப்பான மரங்கள்,

1. The "Smoke that sounds." 2. Victoria Falls.

விலங்குகள் பறவைகளைப்பற்றியும் நிலத்தின் தன்மை, பருவத்தின் விவரம் முதலியவற்றையும் ஊன்றி ஆராய்ந்தார். 20 அடி உயரம்வரை அமைந்திருந்த எறும்புப்புற்றுக்களைக் காண அவருடைய வியப்புப் பெருகியது. கண்டறியப்படாத இடங்களை எல்லோரும் காண அறியச் செய்வது தமது கடமை எனத் துணிந்ததுபற்றி அவர் மகிழ்ந்தார். நிலத்தின் வழியாகத் தாம் செய்த பயணம் மிகவும் தொல்லை மிகுந்திருந்தபடியால் நீரிற் கலங்கள் செல்லக்கூடிய வழியொன்றைக் கண்டு பிடித்தால் தம் நாட்டு மக்கள் அந்நாட்டிற் குடியேறி வாணிபம் செய்துவரவும் அந் நாட்டுப் பழங்குடிகளுக்குத் தம் நாட்டு பழக்கங்களைப் புகட்டவும் நல்ல வாய்ப்பு உண்டாகும் என்றெண்ணமிட்டார். ஆதலால், அவர் ஏரிகளையும், ஆறுகளையும், அருவிகளையும் கண்டபோது அவற்றின் முழு விவரங்களையும் அறிய விரும்பியதன்றி, அருகில் ஏதாவது ஆறோ ஏரியோ உண்டோவென ஆராய்வார். அவருடைய துணைவர்கள் அவருக்கு [1]"ஆற்றுப்பைத்தியம்" ஏற்பட்டிருப்பதாக வேடிக்கையாகக் கூறுவதுண்டு.

இவ்வாறு நெடுநாள் பயணம் செய்தமையால் லிவிங்ஸ்டனுடைய உடல் உரங் குன்றி அடிக்கடி காய்ச்சல் கண்டது. அவருடைய துணைவர்கள் அவரை இங்கிலந்துக்குச் சென்று ஓய்வெடுத்துக்கொள்ளும் படி வேண்டினர்கள். எனவே, 1856-இல் லிவிங்ஸ்டன் தம்முடைய தாய்நாடு திரும்பினர்.

### வரவேற்பு

நலிந்தோர் நலனையும், தாய்நாட்டினரின் சிறப்பையும் இலக்குகளாகக்கொண்டு பேரிடையூறுகளைப்

1. River. - Mad.

பொருட்படுத்தாது பிறநாட்டிற் பல்லாண்டு பணி யாற்றிய லிவிங்ஸ்டனைக் கண்ட இங்கிலந்து நாட்டினர் மாண்டவர் மீண்டதுபோற் களிப்படைந்தனர். கல்லூரிகளிலிருந்தும் பேரூர்களிலிருந்தும் அவருக்கு அழைப்புக்கள் வந்து குவிந்தன. அறிஞர்கள் அவரைக் கண்டு அளவளாவ மிகவும் விழைந்தனர். நாட்டிறைவி யாம் விக்டோரியா பேரரசியும் அவருடன் அளவளாவி னார். [1]இறை அவையைச் சார்ந்த குழுவினர் அவருக்கு ஒரு பொற்பதக்கத்தைப் பரிசிலாக வழங்கினார்கள். இலக்கிய மன்றங்களில் அவர் பேசியபொழுது ஆணும், பெண்ணும், வறியரும், செல்வரும், முதியோரும், இளைஞருமாகத் திரண்டு ஆப்பிரிக்கா நாட்டைப் பற்றி அவர் வெளியிட்ட கருத்துக்களை ஊன்றிக் கேட்டார்கள்.

## இரண்டாம் பயணம்

இரண்டாண்டுகள் கழிந்தன. நாட்டில் தமக்கு ஏற்பட்ட பெருமையினால் லிவிங்ஸ்டன் உளநிறைவு பெற்றாரில்லை. நாள் செல்லச் செல்லத் தமக்கு வந்த அழைப்புக்களையும், பரிசில்களையும் அவர் வெறுத்தார். கூட்டங்களிற் செல்லும்போது மாந்தர் வாழ்த்தும் ஒலி, வானளாவினும் அஃது அவருக்கு ஒரு பெருந்தொல்லை யாகவே இருந்தது. "அரசியாற் போற்றப்பட்டு நான் ஒருவன் நல்வாழ்வு வாழ்ந்து என்ன பயன்? ஆப்பிரிக்கா வின் பெரும்பரப்பு இன்னும் கண்டறியப்படாத தாகவே இருக்கிறது. அரேபியருடைய அடிமை வாணிபம் அற்றுப்போகவில்லை. அறியாமை நிறைந்த ஆப்பிரிக்கக் குடிகளும் அறிவொளி பெற்றாரில்லை. இந் நிலையில் நான் மேற்கொண்டுள்ள பணி செவ்வனே

1. Royal Geographical Society.

நிறைவேறும் வரையில் நான் வாளா இருத்தல் பெருங் குற்றம்," என்று அவருள்ளம் அவருக்கு அறிவுறுத்திய வண்ணமே இருந்தது. ஆதலால், அவர் தமது அகத் துடிப்பைத் தம் நண்பர்களுக்குக் கூறி, மீண்டும் ஆப்பிரிக்கா செல்வதற்கான முயற்சியில் ஈடுபட்டார். அரசினரும் 5000 பொற்காசுகள் நன்கொடை யளித்து லிவிங்ஸ்டனை ஊக்கினார்கள். ஆற்றிற் செல்லக்கூடிய கலமொன்றைச் சமைத்துக்கொண்டு மாலுமி யொருவரையும் [1]பயிர்நூல் அறிஞரொருவரையும், [2]அமைப்பறிஞரொருவரையும், [3]ஓர் ஓவியக்காரரையும் மற்றும் மூன்று அறிஞர்களையும் தமக்குத் துணையாக அழைத்துக் கொண்டு லிவிங்ஸ்டன் 1858-இல் புறப்பட்டு ஆப்பிரிக்கா வந்துசேர்ந்தார். ஸாம்பெஸி ஆற்றின் வழியே சென்று ஆப்பிரிக்கா நாட்டின் உட்பிரிவை ஆராய அவர்கள் முயன்றனர். ஸாம்பெஸியிலும் நெடுந்தொலை செல்லல் இயலவில்லை. வேகமாய்ச் செல்லும் சுழல்களினால் கலத்திற்கே ஊறு ஏற்படும் போலிருந்தபடியால் அவர்கள் தாங்கள் சென்ற போக்கை மாற்றி ஸாம்பெஸியினுடைய பிரிவான [4]ஷைர் வழியே செல்லத் தொடங்கினார்கள். அவ்வழியி லும் அவர்களுக்கு இடையூறுகள் நேர்ந்தமையால், அவர்கள் அக்கலத்தை விட்டிறங்கித் தரையில் நெடுந் தொலை சென்று [5]ந்யாசா ஏரியைக் கண்டுபிடித்தனர். அவ்வேரியைச் சுற்றியிருந்த நிலம் உடல்நலத்துக்கு மிகுந்த கேடு விளைவிக்கத்தக்கதா யிருந்தபடியால் அங்கே யாரும் குடிபுக வியலாதென்றெண்ணி வேறிடங் களைத் தேட முயன்றார்கள்.

1. Botanist. 2. Engineer. 3. Artist. 4. Shire.
4. Nyasa.

## அடிமை வணிகரும் லிவிங்ஸ்டனும்

ஆங்காங்கு லிவிங்ஸ்டன் அராபிய வணிகக் குழு வினரையும், அவர்களாற் கொடுமைப்படுத்தப்பட்டு நலிந்து நின்ற உள்நாட்டுக் குடிகளையும் கண்டு வருந்த நேர்ந்தது. அன்றியும், லிவிங்ஸ்டன் சென்ற வழியைப் பின்பற்றி அவரறியாமல் அராபியர் சென்று உள்நாட்டில் இருந்த மக்களைக் கொடுமைப்படுத்தலாயினர். அச் செய்தி யறிந்த லிவிங்ஸ்டன் எவருடனும் கலகமிடுவ தில்லை எனத் தாம் கொண்டிருந்த கொள்கையைக் கைவிட்டு, அராபியரைக் கண்டவிடத்தில் தாக்கி அடிமைகளை விடுவிக்கும் நெறியைக் கைக்கொண்டார். ஆதலால், அராபியருக்கும் லிவிங்ஸ்டனுக்கும் பகை ஏற்பட்டது.

## இறுதிப் பயணம்

அவ்வாறு பலகாலம் அலைந்ததனுல் உடல்மெலிந்த லிவிங்ஸ்டன் இங்கிலாந்துக்குத் திரும்பினுர். அங்குச்சில காலம் தங்கினுர். உடல் சற்று நலம் பெற்றதும் மீண்டும் தம் பயணத்தைத் தொடங்கினுர். அவருடைய நண்பர் கள் அவருடைய மூப்பைக்கருதி அவரைச் செல்லாமல் தடுக்க முயன்றது வீணுயிற்று. அரசினரால் லிவிங்ஸ்டனுக்குத் துணைவராக அனுப்பப்பட்டவருள் ஒருசிலரும் அவரைக் கைவிட்டுத் திரும்பினர். லிவிங்ஸ்டனை உள் நாட்டுக் குடிகள் கொலைசெய்துவிட்டதாக அவர்கள் புனைவுரை புகன்றனர். ஆங்கில நாட்டினர் அதனை ஏற்க வில்லை. நன்றியறிவு மிக்க ஆப்பிரிக்க நாட்டினர் தங்கள் நலனுக்காக அல்லும் பகலும் அல்லற்பட்டுழைத்த லிவிங்ஸ்டனைக் கொல்ல நினைப்பதும்செய்யார் என் பதை ஆங்கிலேயர் அறிந்திருந்தனர். அவர் எங்கேனும் ஓர் இடத்தில் உள்நாட்டு மக்களோடு உள மகிழ்வோடு

அளவளாவிக்கொண் டிருப்பாரென்றும், மூப்புமேலிட்ட அவரை எவ்வாறேனும் மீட்டுக்கொண்டு வந்து நல்வாழ்வு வாழவைக்க வேண்டுமென்றும், அரசியலாரும், நண்பரும், உறவினரும் கருதினர். அதன்படி அவர்கள் [1]நியூயார்க் ஹெரால்ட் செய்தித்தாளின் [2]அறிக்கையாளர் [3]ஹென்றி ஸ்டான்லி என்பவரைத் தேர்ந்தெடுத்து லிவிங்ஸ்டனை அழைத்துவரப் பணித்தனர்.

### உண்மையாளரின் உறுதி

பேரிடையூறுகளைப் பொறுத்துக்கொண்டு பொறுமையோடு காடும் காஞறும் கடந்து சென்று ஸ்டான்லி இறுதியில் [4]உஜிஜி என்னுமிடத்தில் லிவிங்ஸ்டனைக் கண்டு நாட்டிற்குத் திரும்பி வரும்படி அழைத்தார். நாட்டிற்கு நண்பரோடு மீண்டு நாட்டினரைக் கண்டுகளிப்பதை லிவிங்ஸ்டன் விரும்பினாரெனினும், பல்லாயிர மக்கள் பதைத்திருப்பதைக் கண்ட பிறகும் அவர்கள் துயரை வேரோடு களையாமல் நாடு மீள நினைத்தாரில்லை. "என்று அடிமை வாணிபம் அறவே அழிகின்றதோ, அன்றுதான் தாய்நாடு திரும்பமுடியும்," என்று உறுதியாய்க் கூறித் தம் நண்பரைத் திருப்பியனுப்பிவிட்டார். ஸ்டான்லி தாய்நாடு திரும்பியதும் லிவிங்ஸ்டனுக்கு உதவும்படியாக உணவுப்பொருள்களையும் துணைவர்களையும் அனுப்பிவைத்தார். லிவிங்ஸ்டன் அவர்களைச் சேர்த்துக்கொண்டு [5]தங்கனிகா ஏரியைக் கண்டுபிடித்தார். அப்பொழுது வயிற்றுப்போக்கு அவரை வாட்டத் தொடங்கியது. எனினும், அதைப் பொருட்படுத்தாமல் தம் துணைவர்களின் உதவியால் மேற்செல்லத் தொடங்கினர்.

---

1. New York Herald. 2. Reporter. 3. Henry Stanley
4. Ujiji. 5. Lake Tanganyika.

## இறுதி

கடைசியில் [1]சித்தம்போ என்னுமிடத்தை அடைந்தார். ஓயாத உழைப்பால் நலிவடைந்திருந்த அவர், 1873-இல் மே முதல்நாள் இறையடி சேர்ந்தார். எழுந்திருக்கமுடியாத நிலையிலிருந்த அவர் தமது இறுதி நாள் வந்துற்றதை யறிந்து முழந்தாளிட்டு இறைவனை வணங்கி, "அடிமைத்தளை அறவேண்டும்; ஆப்பிரிக்க நாட்டினர் ஆக்கமுறவேண்டும்," என்று வேண்டியவாறே உயிர் நீத்தாராம்! என்னே இப்பெரியாரின் தந்நலமற்ற தன்மை!!

## அடிமை வாணிபம் ஒழிதல்

லிவிங்ஸ்டனுடைய வேண்டுகோள் வீணாகவில்லை; அவர் எழுதிய நூல்கள் பிற்காலத்தில் ஆப்பிரிக்க நாட்டை ஆராய்ந்த அவர் நண்பர் ஸ்டான்லிக்கு மிகவும் உதவிபுரிந்தன. ஆங்கில நாட்டாரும் அடிமைவாணிபத்தை ஒழிக்குமாறு சொல்லி அரேபிய அரசருக்கு ஆள் விடுத்தனர். நாளடைவில் அடிமைவாணிபம் ஒழிந்தது. அடிமை மக்களும் துயர் நீங்கிக் களித்தனர்.

---

1. Chitambo.

## ௩. ரோவால்ட் அமண்சன்[1]

### நில முனைகள்

நில உருண்டையினுடைய வடமுனையையும் தென் முனையையும் ஆராய்ந்தறியப் பண்டைநாள்முதல் அறிஞர் பலர் முயன்றனர். பயணத்திற்கே இடையூறு விளைக்கக்கூடிய இடம் நில உருண்டையினுடைய முனைதான். அங்குக் குளிர் மிகுதியால் தரையில் பனி உறைந்திருக்கும். உணவுப் பொருள் கிட்டாது ; ஆறு திங்கள் பகலாகவும், ஆறுதிங்கள் இரவாகவும் இருக்கும். தரையிலும் ஆங்காங்குப் பெரும்பள்ளங்கள் உள்ளன. பனிமூடிய நிலத்தில் வழுக்கிப் பள்ளத்தில் விழ நேரிடின் உயிர் தப்பல் இயலாது. அன்றியும், குளிர்நாளில் கடல்நீரும் உறைந்துவிடு மாதலால், கலங்கள் கடலில் சிக்கிக்கொண்டு அசையமுடியாதபடி இருக்க நேரிடும். முனை நோக்கிச் செல்லும்போது கலம் தவறான வழியே சென்று பாறைகளில் மோதியும், பெருமீன்களினால் தாக்குண்டும் ஒழிவதால் கலத்திற் செல்லும் அனைவரும் உயிரிழக்க நேருவதும் உண்டு.

### வடமேற்கு வழி

ஆசியா சென்று, அந்த நாட்டாரோடு வாணிபம் செய்ய ஐரோப்பியர் விரும்பினரென்பதை நீங்களறிவீர்கள். தரைவழியாக ஆசியா செல்ல ஒரு வழி காணப் பலர் முயன்றனர். மற்றொரு பிரிவினர் கடல் வழியாக ஆப்பிரிக்காவைச் சுற்றி இந்தியா செல்லஃக்கூடு மென்றும் கருதினர். ஐரோப்பாவின் வடமேற்கிற் சென்றால், ஆசியாவின் கிழக்குப் பகுதியை யடையலாம்

1. Roald Amundsen.

என்று பலர் எண்ணமிட்டனர். நிலம் உருண்டை வடிவானபடியால் ஐரோப்பாவிலிருந்து மேற்கே சென்றாலும், கிழக்கே சென்றாலும் ஆசியாவை யடையலாம் என்று அவர்கள் நினைத்தனர். இவ்வாறு ஐரோப்பாவிலிருந்து வடமேற்காகச் சென்று ஆசியா செல்லும் வழி அறிபவர்களுக்கு இருபதினாயிரம் பொற்காசுகள் நன்கொடை யளிப்பதாக ஆங்கில அரசினர் அறிவித்திருந்தனர். ஆதலால், வடமேற்கு வழியைக் கண்டுபிடித்தால் அப்பரிசில் பெறுவதும் உலகோரனைவருடைய வாழ்த்துக்கும் நன்றியறிவிற்கும் தாம் உரியராவதும் ஒருபுறமிருக்க, உலகின் பல நாட்டு மக்களுக்கும் தாம் ஒரு தொண்டு ஆற்றியதாகும் என்று அறிஞர் பலர் முயன்றனர்.

## அமண்சன் ஆராய்ச்சி

அவர்களுள் [1]ரோவால்ட் அமண்சன் ஒருவர். அவர் [2]நார்வே நாட்டைச் சேர்ந்தவர். இளமையிலேயே எதையும் நுட்பமாகக் கூர்ந்து ஆராயும் ஆற்றல் பெற்றிருந்தார். திறமையும் மனவன்மையும் மிக்க செயல்கள் பல செய்வதில் அவருக்குப் பெரிதும் விருப்பம். அவர் உலகின் வடமுனையைக் காண ஊக்கம் கொண்டார். தமக்குமுன் வடமுனை காணச் சென்று மறைந்த [3]சபாஸ்டியன் காபட், [4]ஹென்றி ஹட்சன், [5]விட்டஸ்பேரிங், [6]ஜான் பிராங்ளின் முதலியவர்களுடைய வாழ்க்கைவரலாறுகளையும், வடமுனைப் பயணத்தின் போது அவர்கள் அவ்வப்போது தாம் கண்டவைகளைப் பற்றி வரைந்த குறிப்பு விவரங்களையும் ஆவலுடன் படிப்பார். அத்தனைபேரும் வெற்றியடையாததற்குக்

1. Roald Amundsen. 2. Norway. 3. Sebastion Cabot. 4. Henry Hudson. 5. Vittus Bering. 6. John Franklin.

காரணம் யாதென ஆராய்ந்தார். அனைவரும் ஆற்ற லும் ஆண்மையும் பெற்றவர்களே! ஆயினும் வட முனையைக் காணச் செல்லும்போது அவர்கள் பயணத் திற் குறைபாடுகள் இருந்தனவோ வென அவர் ஆராய்ந்தார். கடுங்குளிரிலிருந்து தங்களைக் காக்கத் தகுந்த உடைகளை வடமுனை செல்பவர்கள் அணிவ தால் ஒருவாறு குளிர்க்கொடுமையினின்றும் தப்ப லாம்; பனிப்புயலினின்றுந் தப்புதல் அவரவர் செல் லும் காலத்தைப் பொறுத்தது; வழியில் ஏற்படும் இடர்கள் எல்லோருக்குமே உண்டு. எனினும், எதிர் பாராத சில நிகழ்ச்சிகளால் தாம் மீளத் திட்டம்போட் டிருந்த காலத்தில் மீள முடியாமற் போவதுண்டு; கப் பல் குளிரால் உறைந்த நீரில் சிக்கிக்கொள்ளுமாயின் கோடை வரும்வரை காத்திருக்க நேரும். அக்கோடையி லும் அப்பாகத்தில் ஏற்படும் வெப்பம் பனிப் படலத்தை முழுவதும் கரையச் செய்யப் போது மானதாயிராது. அப்போது மனித முயற்சியால்தான் பனிப்படலத்தை உடைத்துக் கலஞ் செலுத்தவேண் டும். இத்தகைய எதிர்பாரா நிகழ்ச்சிகளால் ஏற்படும் காலக்கழிவிற்கு ஏற்ற அளவு உணவுப் பொருளையும் கொண்டு செல்லல்வேண்டும். நெடுநாட்கள் சேமித்து வைக்கப்பட்ட பொருள்களையே உண்ணவேண்டு மாதலால் அவர்களுக்கு நோய் வரக்கூடும்; ஆதலால், அதற்குத் தக்க முன்னேற்பாட்டோடு செல்லவேண் டும்.

## தென்முனைப் பயணம்

இத்தகைய இடுக்கண்களைப்பற்றியும் அவற்றைத் தடுக்கத் தகுந்த ஏற்பாடுகள் எவை என்பதுபற்றியும் அமண்சன் நன்கு ஆராய்ந்தார். தாம் செல்லக்கூடிய

பயணத்தில் தமக்கு ஏற்படும் இன்னல்களைப் பொறுத்துக்கொள்ளப் பழக முயன்றார். அதற்காக அவர் கலங்களிற் பணியாற்றத் தொடங்கினார். அப்பணியில் நற்றிறமடைந்து நற்பெயர் பெற்றபடியால் [1]தென் கீழ் முனையை ஆராய்வதற்கென்று பயணப்பட்ட [2]பெல்ஜிகா என்ற கப்பலின் தலைவரானார். இந்நிகழ்ச்சி அவருக்கு மிகவும் ஊக்கத்தை ஊட்டியது. தென்முனை செல்லும் போது தாம் கண்டறியும் கருத்துக்கள் வடமுனையைத் தாம் ஆராயச் செல்லும்போது தமக்கு ஆக்கந்தரும் என்று அவர் நினைத்தார். ஆதலால், தாம் செல்லுகையில் ஏற்பட்ட ஒவ்வொரு நிகழ்ச்சியையும் குறித்துக் கொண்டார். [3]தென் விக்டோரியா நிலத்தை நெருங்கிய போது கலம் பனியிற் சிக்கிக்கொண்டது. ஓராண்டளவும் அசையாமல் இருந்தது. கடுங்குளிர் தாங்காமல் மாலுமிகளிற் சிலர் மனநிலை யிழந்தனர்; மற்றவர் [4]கடல் நோய்வாய்ப்பட்டனர். வழக்கமாய் உண்ட உணவுப் பொருளைவிட்டுப் புதிதாய்த் தயாரித்த உணவுப் பொருளை உண்டால் கடல்நோய் தீரும் என்பதை அமண்சன் அறிவார். மிகுந்த தொல்லையோடு அமண்சன் அவ்வுறைபனிப்படலத்தில் நெடுந்தொலை சென்று மீனும் பறவைகளும் தேடிக்கொண்டு வருவார். நாளடைவில் நோய் நீங்கி மாலுமிகள் உடல் நலமுற்றனர். தாம் சென்ற கலம், பனிப்படலம் கரைந்து பயணம் செல்லக்கூடிய நிலையையடைந்ததும் அமண்சன் நார்வே திரும்பினார்.

### அறிஞரை அடைதல்

[5]இழுதிறனையும் [6]காற்றுப்பகுதி நிலையையும் ஆராய்ந்தறியுங் கலைபயில அமண்சன் ஆவல் கொண்டார்.

1. South Magnetic Pole. 2. Belgical. 3. South Victoria Land. 4. Scurvy. 5. Magnetism. 6. Meteorology.

[1]வான்நியூமேயெர் என்னும் செருமானிய அறிஞரிடம் சென்றார். அவ்வறிஞர் அமண்சனை மிக்க பரிவோடு வரவேற்றார். அமண்சன் இழுதிறனைப்பற்றித் தாம் நன்கு ஆராய்ந்தறிய விரும்புவதாகவும், தென்முனை யடுத்த பிரிவில் தாம் ஈராண்டுகள் சுற்றுப்பயணம் செய் திருப்பதாகவும் அறிவித்தார். நியூமேயெர் குறுநகை கொண்டார். "நீங்கள் உங்கள் உளக்குறிப்பு முழு வதையும் எனக்கு உணர்த்தவில்லைபோ லிருக்கிறது! இன்னும் ஏதேனும் நீங்கள் அறிய விரும்பினால் தாங்கள் அதை எனக்கு அறிவிக்கலாமே!" என்று அமண்சனை அறிஞர் கேட்டார். "வடமேற்கு வழியை நானே முதலில் வகுக்கவேண்டும் என்பது என்னுடைய பேரவா!" என்று விடையிறுத்தார் அமண்சன். "புகழத் தக்க பேரவாவே, தாங்கள் இன்னும் ஏதோ ஒன்றை என்னிடம் கூறாமல் மறைக்கின்றீர்கள்," என்று அறிஞர் கூறினார். அமண்சன் நியூமேயெரின் நுண்ணறிவை வியந்தார். நாட்டுப்பற்று மிக்க பல இளைஞருக்குள்ள இலக்குத் தமக்கும் இருக்கும் என்பதைத் திடமாய்க் கண்டுகொண்ட அவ்வறிஞரை நோக்கி, "ஆம்! கூறி விடுகிறேன்; வட விழுமுனை எவ்விடமுள்ளது என் பதையும் காண நான் எண்ணியுள்ளேன்," என்று கூறினார்.

## அறிஞரின் ஆசி

அமண்சனை அறிஞர் ஆவலோடு தழுவிக்கொண் டார். 'தாங்கள் அதைச் செய்தால் ஊழிவரை மக்க ளுக்கு மாண்பு மிக்கதோர் உதவிசெய்தோராகுவீர். அதுவே உண்மையான வீரச்செயல்,' என்று கூறினார். அமண்சனுக்கு அளவில்லாத உள்ளக் கிளர்ச்சி ஏற்பட்

1. Von Neumayer.

டது. தம்முடைய முயற்சியில் தமக்குத் தோல்வியே கிட்டுமென்றும், தாம் அம்முயற்சியால் வீண் தொல்லையே அடைய நேருமென்றும் எவரேனும் தமக்கு அறிவுறுத்திக் கூறினாலும், தினையளவும் உளத்தளர்வடையாதவர்க்கு நியூமேயெர் கூறிய சொற்களைக் கேட்டதும் உற்சாகம் கட்டுக்கடங்காமற் பெருகியது. தம்முடைய முயற்சியில் தாம் நினைத்ததைவிடக் கொடிய இடுக்கண் நேரினும், தாமும் தம் துணைவர்கள் அனைவரும் தாம் மேற்கொள்ளப் போகும் பயணத்தில் மரிக்க நேரினும், தாம் வடவிமுமுனையை எவ்வாறேனும் காண முயல்வதென்று முன்னரே கொண்டிருந்த உறுதியை மீண்டும் திடப்படுத்திக்கொண்டார்.

## வடக்குப் பயணம்

1903-ஆம் ஆண்டு ஜூன்மீ 16-உயில் அறுவரைத் தமக்குத் துணைவராகக்கொண்டு அமண்சன் ஒரு மீன் படகில் பயணமானார். சின்னாட்களில் கலம் [1]உரியொலி என்னுமிடத்தைச் சேர்ந்தது. அதற்கப்பால் அவர்களுக்குமுன் வேறெவரும் சென்றதில்லை. எனவே, [2]வழிப்படங்கள் எவையும் இல்லை. அமண்சன் மிகுந்த விழிப்போடு கலத்தைச் செலுத்தலானார். தாம் சென்ற வழியைக் காட்டும் வழிப்படத்தைத் தாமே தயாரித்தார். ஒருநாள் கடும்புயலொன்று தொடங்கியது. கலமானது அங்குமிங்கும் நிலையிழந்து ஆடிற்று. பெரிய அலையொன்று விரைவாக துடுப்பில் மோதிற்று. துடுப்பு அச்சைவிட்டுச் சற்று விலகிவிட்டது. கலத்தைத் தங்கள் திட்டப்படி செலுத்தல் இனி அவர்களால் இயலாது. கலமும் வழி தப்பியது. ஒரு பாறையை நெருங்கிற்று; கலத்தின் அடிப்புறமும் பாறையின் ஒரு

1. Peel sound. 2. Charts.

புறத்தில் மோதியது. அவர்களெல்லோரும் தங்களுடைய ஆயுள் முடிவடைந்ததாக நினைத்தனர்; அமண்சனுக்கு உயிரிழப்பதில் அச்சம் இல்லை. எனினும் தம்மால் நாட்டுக்கு ஏற்படவிருந்த நற்பயன் கிட்டாதேயென்ற ஒரு குறை உண்டாயிற்று. எனினும், அவர் நம்பிக்கையை முழுதும் கைவிடவில்லை. ஒருவேளை ஏதேனும் தாம் முன்னோக்காத நிகழ்ச்சியால் தமது திட்டம் நிறைவேறினாலும் நிறைவேறும் என்று நினைத்தார்.

கலம் நிலையடைதல்

மறுகணம் வேறொரு திரையானது கலத்தைத் தள்ளி அதனுடைய வழியிற் சேர்த்தது. திரையால் தாக்குண்ட துடுப்பு மீட்டும் தன்னிலை சேர்ந்து பணியாற்றத் தொடங்கிற்று. அனைவரும் உள மகிழ்ந்தனர். கலத்தில் ஓட்டை ஏதாவது ஏற்பட்டதோவென்று விரைவாகச் சோதித்தார்கள். கலத்திற்கு ஊறு ஏதும் ஏற்படவில்லை என்று கண்ட அமண்சன் அடைந்த களிப்பை யாரே யறிவார்! எனினும், துடுப்பு மீண்டும் நிலையிழந்துவிடுமோ என்றொரு கவலை அவரை வாட்டியது. மிகவும் மெதுவாகக் கலத்தைச் செலுத்தி [1]வில்லியம்அரசர்தீவு என்று இப்போது சொல்லப்படும் தீவையடைந்து ஒரு தகுதியானவிடத்தில் கலத்தை நிறுத்திக் கரை சேர்ந்தனர். குளிர்காலம் தொடங்கிவிட்டபடியால் அவ்விடத்திலேயே தங்களுக்குத் தங்குமிடங்கள் அமைத்துக் கொண்டு குளிர்காலத்தை அங்கே கழித்துக் கோடை காலம் வந்துற்றதும், தம்முடைய பயணத்தை மீண்டும் தொடங்கலாமென்று கருதி, அதற்கான

---

1. King William Island.

ஏற்பாடுகளைச் செய்துகொண்டார்கள். அவ்விடத்தி லேயே அமண்சன் தமக்கென ஓர் [1] ஆய்வுக்கூடம் ஏற்படுத்தி, இழுமுனையினுடைய இருப்பிடத்தைக் காட்டக்கூடிய பொறிகளை அவ்விடத்தில் அமைத்தார்.

## ஆய்வுக்கூடம்

ஆய்வுக்கூடம் அமைப்பதற்குத் தேவையான பொருள்களை அமண்சன் தம்மோடு கொணர்ந்திருந்தார். [2] இழுதிறவூசிமுனை அமைக்கத்தகுந்த சிறந்த சலவைக் கற்களையும், வெப்பமும் குளிரும் அவற்றைத் தாக்கா வண்ணம் காப்பளிக்கப் பலகைகளாலும் செப்பாணிகளாலும் ஆக்கப்பெற்ற பெட்டிகளையும் கொணர்ந்திருந்தார். இருப்பாணிகளை, [3] இழுதிறன் [4] வயப்படுத்துமாதலால், பெட்டிகளில் இரும்பு ஆணிகளை அமைத்தால், தமது இழுதிற ஊசிகள் அவற்றின் பணியைச் செவ்வனே செய்ய இயலாதென்று அவர் அறிந்திருந்தார். அமண்சன் தமது முழுத்திறனையும் பயன்படுத்தி அமைத்த அப் பொறிகள் நன்கு பணியாற்றின.

## வட விழுமுனை

நில உருண்டையின் வடக்கேயும் தெற்கேயும் இழுதிறன் உள்ளது என்பது நீங்கள் அறிவீர்கள். அதனாற்றான் ஒரு இழுதிறன் ஊசியை நாம் பார்த்தோமானால் அது தென் வடலாகவே உள்ளது. இனி இவ்வூசி குறிப்பிடும் வடதிசையானது [5] வடமுனைமீன் இருக்குமிடத்திலிருந்து சற்றுக் கிழக்

1. Observatory. 2. Magnetic needle. 3. Magnetism.
4. Attract. 5. North Polar Star.

கிலோ அல்லது மேற்கிலோதான் பெரும்பாலும் உள்ளது. சில சமயங்களில் இவ்வூசியானது பல மாதங்களுக்கு முன் காட்டிய திசையைக் காட்டாமல் சற்றே மாறுபட்டு நின்றது. ஆதலால், நிலஇழுதிற னுடைய முனைகள் இடம் மாறிக்கொண்டு வரக்கூடு மென்று அமண்சனுக்குத் தோன்றியது.

## உள்நாட்டினரைக் காணல்

கலத்திற் சேமிக்கப்பட்ட உணவுப் பொருள்க ளன்றி வேறு உணவுப்பொருளை உண்ணவேண்டு மென்று அமண்சனும் துணைவரும் விரும்பினார்கள். அப்போதெல்லாம் அமண்சனும் அவர் தம் துணை வரும் வெளியே சென்று கரடிகளையும் கலைமான் களையும் வேட்டையாடி வருவார்கள். அவற்றின் இறைச்சியைப் பதஞ்செய்து உண்பார்கள். கடல் நோய் காணுமல் தங்களைக் காத்துக்கொள்ள அமண்சன் இந்த முறையைக் கைக்கொண்டார். ஒருநாள், அவர் கள் இவ்வாறு வேட்டையாடச் சென்றபோது, தொலை யில் கலைமான் தோலுடுத்து, வில்லை அம்புடன் கைக் கொண்ட மக்கள் சிலரைக் கண்டார்கள். அமண்சனும் அவர் குழுவினரும் தம்முடைய கையிலிருந்த [1]கொல் மருந்துக் கருவிகளைக் கீழே யெறிந்து தம்முடைய நல் லெண்ணத்தைக் காட்டினார்கள். உடனே அம் மக்களும் தங்கள் கைகளிலிருந்த வில்லையும் அம்பையும் கீழே எறிந்துவிட்டு அமண்சனையும் அவர் குழுவினரையும் அணுகினார்கள். அவர்கள் [2]எஸ்கிமோ எனப்படும் மக்கள் இனத்தினர். அமண்சன் அவர்களுக்குத் தம் முடைய கலத்தையும், தம்முடைய ஆய்வுக்கூடத்தை யும் காட்டினார். அவர்கள் மிகவும் வியப்புற்றனர்.

1. Earth Magnet. 2. Eskimo.

## எஸ்கிமோ மக்கள்

எஸ்கிமோமக்கள் பனி நிறைந்த இடத்தில் உறைந்து வந்தமையால், கலைமானினுடைய தோலையும், ஆங்குக் காணப்பட்ட கரடிகளினுடைய தோலையும் உடையாகச்செய்து அணிந்தார்கள். அவர்களுக்கு அவ் விலங்குகளினுடைய இறைச்சியும் ஒருவகை மீனுமே உணவுப்பொருள்களாம். அங்குக் கிடைத்த மீனி னுடைய கொழுப்பை எடுத்து அவர்கள் குளிர்காலத் தில் விளக்கெரிப்பார்கள். தாங்கள் கொன்ற மிருகங்களி னுடைய எலும்பைக்கொண்டே அவர்கள் தங்க ளுடைய வில் அம்புபோன்ற வேட்டைக் கருவிகளையும், தங்களுடைய ஆடைகளைத் தைப்பதற்கு வேண்டிய சிறிய ஊசிபோன்ற கருவிகளையும் செய்துகொள்வார் கள். அமண்சன் எஸ்கிமோமக்களோடு நட்புரிமை கொண்டார். எஸ்கிமோமக்களும் அவருக்கு வேண்டிய உதவிகளைச்செய்தார்கள்.

## வடமேற்கு வழி காண்டல்

அமண்சனும் அவர் குழுவினரும் 1905-ஆம் ஆண்டு, ஆகஸ்டுத் திங்கள் மீண்டும் புறப்பட்டு, வடக்கே சென்றார்கள். எந்த விடத்தில் தாம் தமது கலம் சென்ற திசையை மாற்றவேண்டுமென்பதை அமண்சன் மிகுந்த எச்சரிக்கையோடு கணக்கிட்டிருந் தார். அவ்வாறு செல்லும்போது, ஆழமற்றவிடங்களில் கூட அவர் கலத்தைச் செலுத்த நேர்ந்தது. ஓரிடத்தில் அவருடைய கலம் செல்லும்போது, அதனடிப்பாகத்திற் கும் கடல்நீர்ப்பகுதியின் அடிப்பாகத்திற்கும் இடையே யிருந்த ஆழம் ஒரு முழத்தைவிடக் குறைவாகவேயிருந் தது. அவ்வாறு பயணம் சென்றுகொண்டு இருக்கும்

போது ஒருநாள் கடலில் திமிங்கிலவேட்டை யாடுவோரு டைய கலங்களைக் கண்டார். வட அமெரிக்காவின் வடக்கிலுள்ள [1] அலாஸ்காவின் வடகரையிலுள்ள கடலைத்தாம் வந்தடைந்தது கண்டு அமண்சன் மகிழ்ந் தார். அவர் தேர்ந்தெடுத்த வழி நல்ல வழியாகவே அமைந்தது. அவ்வாறு வடமேற்கு வழிகண்டு தாய்நாடு திரும்பினார் அமண்சன்.

### நார்வே நாட்டினர் மகிழ்வு

நாடு திரும்பிய அமண்சன் தாம் கண்ட உண்மை களை மக்களுக்கு அறிவித்தார். வடமேற்குப் பாதையை முதன்முதலில் கண்டறிந்த புகழ் அமண்சனைச் சேர்ந் தது. அறிஞர் பலர் அமண்சனைக் கண்டு அள வளாவினர். அமண்சன் அவர்களுக்குத் தாம் சென்ற பயணத்தைப்பற்றிக் கூறினார். எஸ்கிமோ மக்களைப் பற்றியும் அவர்களுடைய வாழ்க்கை விவரங்களைப் பற்றியும் கூறினார். தம் நாட்டினருக்குக் காட்டுவதற் காகத் தாம் கொண்டுவந்திருந்த எஸ்கிமோ மக்க ளுடைய ஈட்டி, வில், அம்புபோன்ற கருவிகளையும் கலைமான்தோலாற் செய்யப்பட்ட ஆடைகளையும் காண் பித்தார். அமண்சன் தமது நாட்டினர் என்று கூறுவ தில் நார்வே நாட்டினர் மிகவும் பெருமையடைந்தனர்.

### தென்முனைப் பயணம்

சில திங்கள் கழிந்தன. அமண்சன் நில உருண் டையினுடைய தென்முனை காண விரும்பினார். ஆண்டுச் சென்றால், [2] அண்டார்டிகா வெனப்படும் தென் முனைப் பரப்பைப்பற்றிய விவரங்களைக்கொண்டு வர

1. Alaska. 2. Antarctica.

லாம் என அவர் திட்டமிட்டார். 1910-ஆம் ஆண்டில் தெற்கு நோக்கிப் பயணமானார். செல்லும் வழியில் [1]ஸ்காட் என்பவரும் தென்முனை காண முயல்வதாக அறிந்தார். தாமும் தெற்கு நோக்கிச் செல்லுவதாக அமண்சன் அவருக்கு ஒரு செய்தி அனுப்பினார். அமண்சன் கோடைகாலத்தில் தென்முனைப் பகுதியை நெருங்கினார். ஆங்காங்குத் தமக்கு வேண்டிய உணவுப் பொருள்களைச் சிறிது சிறிதாக வழியில் சேர்த்து வைத்து, அவ்வவ்விடங்களில் அடையாளமாகக் கொடி களையும் ஊன்றி வைத்துவிட்டுத் தெற்கு நோக்கிச் சென்றார். 1911-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 14-ம் நாள் அமண்சன் தென்முனை சேர்ந்தார். சுற்றுப்புறங் களில் காணப்பட்ட பொருள்களை ஆராய்ந்துவிட்டு அமண்சன் நார்வே திரும்பினார்.

## வானூர்தியில் வடமுனைப் பயணம்

தம் நாட்டையடைந்த அமண்சன் நில உருண்டையி னுடைய வடமுனை காண விரும்பினார். அவருக்கு முன்னரே [2]பியரி என்ற அமெரிக்கர் அதைக் கண்டு பிடித்தார். எனினும், தாம் சென்று வடமுனை கண் டறிய விரும்பினார். [3]வானூர்தி ஒன்றிலேறி, அவர் வடமுனை சேர்ந்து, ஆங்குள்ள நிலத்தினுடைய அமைப் பைக்கண்டு மீண்டார். வானூர்தியில் வடமுனை சென்றவருள் அமண்சனே முதல்வர்.

## அமண்சன் ஆண்மை

பிறகு மருத்துவர்கள் கூறிய மொழிப்படி அமண்சன் தமது மூப்புக்காரணமாக எங்கும் இனிச்

1. Scott. 2. Peary. 3. Airship.

செல்லுவதில்லை என்று உறுதி பூண்டார். தமது வாழ்நாளை அமைதியாகக் கழிக்க விரும்பினார். அப்போது அவருடைய நண்பரொருவர் [1]இடாலியா வென்னும் வானூர்தியிற் புறப்பட்டு வடமுனை நோக்கிச் சென்றார். குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு பலநாள் கழித்தும் அவர் திரும்பி வராதது கண்ட அமண்சன் ஒரு வானூர்தியில் தமது துணைவரைத் தேடி வடமுனைக்குப் பயணமானார். பல திங்கள் கழிந்தும் அமண்சனைப்பற்றிய செய்தி எதுவும் கிட்டாமற் போகவே பல நாட்டினர் அவரைத் தேடும்படி பல [2]தேடு குழுவினரை அனுப்பியும் பலனில்லை.

நிலஉருண்டையின் கிட்டாத பகுதிகளைக் கண்டறியப் பாடுபட்டு உழைத்து இருமுனைகளையும் அமண்சன் கிட்டினார். ஆதலால், அவர் உலக வரலாற்றில் சிறந்த இடம் பெறுபவரானார்.

---

1. Italia. 2. Searching party.

## ௪. காப்டன் ஸ்காட்

### கடற்படையும் ஸ்காட்டும்

உலகஉருண்டையின் தென்முனையை நன்கு ஆராய முயன்ற ஐரோப்பிய நாட்டினருள் ஆங்கிலேயர் முதன்மையாகக் குறிப்பிடத்தக்கவர்கள். அவர்களுள் [1]காப்டன் ராபர்ட் பால்கன் ஸ்காட் தென்முனை ஆராய்ச்சியில் தம் உயிரையும் இழந்த உத்தமர். அவருடைய முன்னோர் கடற்படையில் பணியாற்றினார்கள். முன்னோர் முறைப்படி ஸ்காட்டும் சிறுவராயிருந்த போதே, கடற்படையில் சேர்ந்து வேலைசெய்ய விரும்பினார். அவர் மிகவும் சிறுவராயிருந்ததனாலும், உடல் உரமில்லாதவரா யிருந்ததனாலும் கடற்படையிற் பணியாற்றத் தகுதியற்றவர் எனக் கூறிக் கடற்படையினர் அவரை ஒதுக்கினார்கள். எனினும், ஸ்காட் மனம் தளராமல் தம்மை ஒரு கலத்தில் குற்றேவல் புரிவோனாகவேனும் ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினார். கடற்படைப்பணியில் அவருக்கிருந்த அளவிலா ஆர்வத்தை அறிந்த கடற்படையினர் அவருடைய விருப்பத்திற்கு இணங்கினார்கள். சில ஆண்டுகள் அளவும் ஒரு கலத்தில் குற்றேவலனாகத் தொண்டு ஆற்றிய ஸ்காட், தமது தலைவர்களுடைய அன்பையும் ஆதரவையும் பெற்றுப் படிப்படியாக உயர்ந்து, கப்பற் றலைவராகப் பொறுப்பேற்கும் தகுதி பெற்றார். கப்பலில் அலுவல் பார்த்தமையால், அவருடைய உடலும் நன்கு வளம் பெற்றது.

---

1. Captain Robert Falcon Scott.

### தென்முனைப்பயண ஏற்பாடுகள்

அந்நாளில், நார்வேநாட்டினர் உலக உருண்டையின் தென்முனையைக் கண்டுபிடிக்க மிகவும் முயன்றனர். அதைக் கேள்வியுற்ற இங்கிலந்துஅரசினரும் தென்முனை கண்டறிய முயல்பவர்க்கு வேண்டிய ஆதரவு அளிக்க முன்வந்தனர். நெடுந்தொலை கடற்பயணம் செல்லுவதிலும், கண்டறியப்படாத இடங்களைக் காணுவதிலும் ஸ்காட் விருப்பம் மிகுந்தவர். ஆதலால், அரசினர் ஸ்காட்டை அழைத்துத் தென்முனைக்குப் பயணம் செய்வதற்கு ஒரு திட்டம் வகுக்குமாறு கூறினார்கள். அவ்வாறே ஸ்காட் ஒரு சிறந்த ஏற்பாட்டைச் செய்தார்.

### பயணஞ் செல்லுவோர் அணிந்த ஆடை

முனைகளில் பனி மிக மிகுதி என்பது யாவர்க்கும் தெரியும். ஆகையால், தென்முனை சென்றோரனைவரும் கலைமான் தோலாற் செய்யப்பட்ட செருப்புகளையும் கையுறைகளையும் அணிந்துகொண்டார்கள். ஒட்டகத்தின் உரோமத்தினால் நெய்யப்பட்ட தலைக்குல்லாய்களையும் அவர்கள் அணிந்துகொண்டனர். அவர்கள் தங்கள் உடலிலும் காலிலும் கம்பளியையும் அதன்மேல் அழுத்தமான நீலநிறத் துணியினால் செய்யப்பட்ட சட்டைகளையும், அவை எல்லாவற்றிற்கும் மேல் மெழுகுத்துணியையும் போட்டுக்கொண்டார்கள். செருப்புகள் பனித்தரையில் ஈரமடைந்து ஊறிப்போகாமல் நெடுநேரம் வெப்பமாயிருப்பதற்காக, ஒருவகைப் புல்லை அச்செருப்புக்களின் உட்புறத்தில் சுற்றினார்கள். ஒட்டகத்தின் உரோமத்தினால் நெய்யப்பட்ட போர்வைகளும், கலைமான் தோலினால் ஆன படுக்கைகளும் அவர்கள் துயிலும்போது மிகவும் நலமளித்தன.

### அவர்களுடைய உணவு

பனித்தரையில் பலநாள் பயணஞ் செல்லவேண்டு மாதலால், அவர்கள் தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தங்களுடன் மிகுந்த எச்சரிக்கையாகக் கொண்டு சென்றார்கள். கலங்களில் எல்லோரும் இடுக்க ணின்றிப் பயணம் செய்யவேண்டுமானால், கலத்தினுள் தேவையற்ற பொருள்களை நிரப்பலாகாது. ஆதலால், ஸ்காட் மிகவும் சத்துள்ள உணவுப்பொருள்களை மட்டுமே சேமித்துக்கொண்டார். ரொட்டி, மாட் டிறைச்சி, கொழுப்பு, [1]உலர்ந்த பாற்பொடி, வெண்ணெய், [2]பாற்கட்டி, எண்ணெய், காப்பி, தேயிலை, பக்குவமாய்ச் சீசாக்களில் அடைக்கப்பட்ட காய்கறித்துண்டங்கள், பழங்கள், ஊறுகாய் ஆகியவற்றை அவர் தம்முடைய கலத்தில் நிறைத்துக்கொண்டார். எனவே அப்பொரு ளில் சிறிதளவு உட்கொண்டாலும் நல்ல உடல்வள முறலாம். உருளைக்கிழங்கு, சர்க்கரை, எலுமிச்சம்பழச் சாறு ஆகியவற்றையும் அவர் நிரப்பிக்கொண்டார்.

### பனிநிலப் பயணத்திற்கேற்ற உருளையில்லாத வண்டிகள்

பனிநிலத்தில் பயணம் செய்வதற்கென ஸ்காட் [3]உருளையற்ற வண்டிகள் பலவற்றைச் செய்து எடுத்துக் கொண்டார். சிலவிடங்களில் பனித்தரை மேடாக வும், சிலவிடங்களில் பள்ளமாகவும் இருக்குமாதலால், பனிநிலத்தில் உருளையுள்ள வண்டிகள் செல்லமாட்டா. ஆதலால், உருளையற்ற ஒருவகை வண்டிகளையே ஆங்குப் பயன்படுத்தவேண்டும். அவ்வண்டிகளில் உருளைகள் இருக்கவேண்டிய இடத்தில் உறுதியான கனத்த கட்டைகள் பொருத்தப்பட்டிருக்கும். கட்டை

1. Powdered Milk. 2. Cheese. 3. Sledges.

கள் உறுதியற்றவையாயிருந்தால், அவற்றினமேல் வெள்ளித் தகடோ, இரும்புத் தகடோ அடிக்கப்பட்டிருக்கும். உருளை இல்லாத அவ்வண்டிகளில் பளு மிகுதியாக ஏற்றமுடியாது. ஆதலால், மக்கள் யாரும் அவ்வண்டிகளிற் பயணஞ்செல்ல இயலாது. அவர்களுடைய மூட்டை முடிச்சுக்களை மட்டுமே அவ்வண்டிகள் தாங்கும். ஸ்காட் தம் தென்முனைப் பயணத்திற்கெனவே செய்த அவ்வண்டிகள் ஒவ்வொன்றும் பதினொரு அடி நீளமிருந்தன; ஐம்பது ராத்தல் எடை இருந்தன. அவற்றை மாடோ, குதிரையோ இழுத்துச் செல்லமாட்டா. குளிர் மிகுந்த நாட்டிலுள்ள [1]கலைமான்களும், நாய்களுமே அவற்றை இழுத்துச் செல்லமுடியும். [2]மட்டக்குதிரைகளும் இழுத்துச்செல்வது உண்டு. ஸ்காட் அதற்காகச் [3]சைபீரியாவிலிருந்து பெரிய நாய்களைத் தம்முடன் கொண்டுபோனார்.

## புறப்பாடு

ஸ்காட்டும் [4]ஷாக்கள்டன், [5]வில்ஸன், [6]ஈவான்ஸ், [7]லாக்லி என்னும் அவருடைய நண்பர்களும் வேண்டிய பொருள்களோடு 1901-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 31-ஆம் நாள் [8]டிஸ்கவரி (நாடுகாண் கலம்) என்னும் கப்பலில் இங்கிலாந்திலிருந்து தென்முனை நோக்கிப் புறப்பட்டார்கள். ஆறு திங்கள் கழிந்ததும், [9]மக்மர்தோ ஒலி என்னும் நீர்ப்பரப்பில் ஒரு துறையில் தங்கினார்கள். அத்துறையை அடுத்துப் பனிப்பரப்பு ஒன்று ஒரு பெரிய சுவர்போல் நெடுந்தொலை நீண்டு காணப்பட்

1. Reindeer. 2. Pony. 3 Siberia. 4. Shackleton. 5. Wilson. 6. Evans. 7. Lachly. 8. Discovery. 9. Mcmurdo Sound.

டது. அப்பனிச் சுவரின் பெரும்பகுதி கடல் மட்டத்தி லிருந்து நூறு அடிக்குமேல் உயர்ந்திருந்தது. அங் கிருந்து தென்முனை செல்லும் வழி பனிமூடியே இருந்த தனால், ஸ்காட் தம் குழுவினர் அனைவரையும் பனியில் நடக்கப் பயிற்சி பெறுமாறு பணித்தார். ஆகையால், ஸ்காட்டினுடைய குழுவினர் அனைவரும் [1]சருக்கற் பயிற்சி பெற்றனர்கள். குளிர்காலத்தை மக்மர்தோ ஒலித்துறையிலேயே கழித்தனர். அங்கே அவர்கள் வீண்பொழுது போக்கவில்லை. அவர்கள் போகவேண் டிய பெரும்பயண ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந் தார்கள். ஓய்வு வேளையில் அவர்கள் நாடகங்களை நடித்தும், [2]தென்முனைக்காலஇதழ் என்னும் தாளில் தாங்கள் பயணஞ்செய்த முறைகளைப்பற்றியும், கண்ட காட்சிகளைப்பற்றியும் எழுதியும், வேண்டிய படங்களை வரைந்து விளக்கியும் இன்புற்றுக் குளிர்நிலத்தில் தாங்கள் அடைந்த அவதியை ஓரளவு மறந்து மகிழ்ந் தனர்.

## பயணம் தொடர்தல்

கோடைகாலம் தொடங்கியதும் அவர்களெல் லோரும் தங்கள் பயணத்தைத் தொடங்கினார்கள். ஸ்காட்டும், அவருடைய ஆராய்ச்சிக்குத் துணைவராக வந்த அவருடைய நண்பர்களும் ஆங்காங்கு ஓய்வெடுத் துக்கொண்டு சென்றனர். ஸ்காட் புறப்படுமுன்பே ஏவலாளர்கள் வண்டிகளில் சிறுகச் சிறுக உணவுப் பொருள்களைக் கொண்டுபோய் ஆங்காங்கு வைத்து அவ்வவ்விடங்களைக் குறிக்கும் அடையாளங்களாகக் கொடிகளைப் புதைத்துவிட்டுக் கலத்திற்கு மீண்டனர்.

---

1. Skiing. 2. South Polar Times.

எனவே, ஸ்காட் ஒரு கல் செல்ல, ஏவலாளர் அவ் வழியில் மூன்று முறை சென்று மூன்று கல் தொலை செல்ல நேர்ந்தது. அத்தகைய ஏற்பாட்டினுல், பயணக் குழுத்தலைவர்கள் தங்கள் ஆராய்ச்சியிலேயே தங்க ளுடைய எண்ணம் முழுவதையும் செலுத்தியதோடு, ஏவலாளர்களும் உணவுப்பொருள்கள் அனைத்தையும் தங்களுடனே கொண்டுசென்று வருந்தாவண்ணம் திரும்பும்போது வேண்டிய உணவுப்பொருள் ஆங் காங்குக் கிடைக்கும் வாய்ப்பும் ஏற்பட்டது. இரண்டு திங்கள் கழிந்ததும், 1902-ஆம் ஆண்டு டிசம்பர்த் திங்கள் 30-ஆம் நாளில் ஸ்காட் [1]82° தெற்குக் கோடு குறிக்கும் இடத்தை அடைந்தார்.

### மக்மர்தோ ஒலித்துறைக்கு மீளுதல்

அப்போது, ஷாக்கள்டன் நோயுற்றுர். மற்றை யோரும் அலுத்துப் போயிருந்தனர். நாய்கள் மிக மெலிந்து வண்டி இழுக்க வலுவிழந்திருந்தன. ஆதலால், ஸ்காட் மக்மர்தோ ஒலித்துறைக்குத் திரும்பி, ஷாக்கள் டன் உடல் நலமுற்றவுடன் மறுபடியும் புறப்பட்டு வரலாமென நினைத்தார். அவ்வாறே அவர்களனை வரும் மக்மர்தோ ஒலித்துறைக்கு மீண்டனர். வழியி லிருந்த ஓர் உணவுப்பொருள் சேமிப்புக்களஞ்சியத்தை அடைவதற்குள் அவர்களுக்குப் பசி மிகுந்தது. நாய்கள் களைத்துப் போயின. மெலிந்த நாய்களைச் சுட்டுக் கொன்று அவற்றின் இறைச்சியைப் பெரிய நாய்களுக் குப் போட்டனர். உணவுக்களஞ்சியத்தை அடைந்த தும் அவர்கள் அனைவரும் கடும்பசியினுல் அளவுக்கு மீறி உணவை அருந்தினுர்கள். அதனுல், எழுந்து

1. 82° South Latitude.

நடக்கமாட்டாமல் திணறினார்கள். அப்போது கடுங் காற்றும் மழையும் கூடியடித்து அவர்களுடைய துணிக் கூடாரங்களைத் தரையில் வீழ்த்தின. அவர்கள் கீழே விழுந்த கூடாரங்களை முன்போல அமைக்க முயன்றார் கள். குளிரில் நின்றுகொண்டு கூடாரம் அமைப்பது மிகவும் வருந்தமான வேலை. அப்போது விரல்களும் கால்களும் உணர்ச்சியற்று விடுமாதலால் அவற்றை அமைப்பது மிகவும் தொல்லை. அவ்வாறு பல இன்னல்க ளால் வருந்தி, அவர்கள் மக்மர்தோ ஒலித்துறைக்கு வந்து சேர்ந்தார்கள்.

ஷாக்கள்டன் சிகிச்சை

புதிதாகப் பக்குவப்படுத்தப்பட்ட இறைச்சியை ஷாக்கள்டனுக்கு உணவாகக் கொடுத்தால் அவருடைய நோய் தீருமென ஸ்காட் நினைத்தார். ஆகையால் அங் கிருந்த [1]சீல் என்னும் ஒருவகை விலங்கினுடைய ஈரலை யும், ஒருவகைப் பறவையினுடைய முட்டையையும் ஸ்காட் தாமே போய்க் கொண்டுவந்து சமைத்து, ஷாக்கள்டனுக்கும் மற்றையோர்க்கும் கொடுத்தார். அது மிகவும் சுவையாயிருந்ததனால், அவர்கள் எல்லோ ருமே அதை மிகுந்த விருப்பத்துடன் உண்டார்கள். எனினும், ஷாக்கள்டனுடைய உடல் நலமுறவில்லை. அப்போது [2]"வைகறை" என்னும் ஒரு துணைக்கப்பல் நிறைய உணவுப்பொருள்களோடு மக்மர்தோ ஒலித் துறைக்கு வந்தது. ஸ்காட், ஷாக்கள்டனை அக்கப்பலில் ஏற்றி, இங்கிலாந்துக்கு அனுப்பிவைத்தார்.

ஸ்காட் பேரிடரினின்று மீளுதல்

அவர்கள் மக்மர்தோ ஒலித்துறையிலேயே 1903-ஆம் ஆண்டில் குளிர்காலத்தைக் கழித்தனர். கோடை

1. Seal. 2. The Morning.

காலம் தொடங்கியதும் செப்டம்பர் மாதத்தில் அவர்க ளனைவரும் மீண்டும் தங்களுடைய பயணத்தைத் தொடங்கினார்கள். (உலக நடுக்கோட்டின் வடக்கே குளிர்காலமாக இருக்கும்போது, அக்கோட்டின் தெற்கே கோடைகாலமாகும்) உணவுப்பொருள்கள் குறையலாயின. பனிப்புயலும் மழையும் மிகவும் அதி கரித்தன. ஆதலால், நவம்பர் 3-ஆம் நாள் அவர்க ளனைவரும் தங்களுடைய பயணத்தைவிட்டுத் திரும்பி னார்கள். திரும்பிச் செல்லும்போது ஸ்காட்டும் ஈவான் ஸூம் அவர்களுடைய வண்டியின் முன்புறத்திலும் லாக்லி பின்புறத்திலும் வண்டியை நகர்த்தினர். அவர்க ளுடைய நாய்கள் மிகவும் இளைத்துப்போய் நடக்கக்கூட முடியாமல் நலிந்திருந்தபடியால், ஸ்காட் குழுவினரே வண்டியை இழுக்கவேண்டியதாயிற்று. அவ்வாறு அவர்கள் போய்க்கொண்டிருக்கும்பொழுது, ஓரிடத் தில் ஸ்காட் கால் சறுக்கி ஒரு பள்ளத்தில் விழுந்தார். ஸ்காட்டை அடுத்து நடந்துகொண்டிருந்த ஈவான்ஸூம் அப்பள்ளத்தில் விழுந்தார். இருவரும் வண்டியின் முன் புறத்திலிருந்த கைப்பிடிகளை உறுதியாகப் பிடித்துக் கொண்டார்கள். வண்டியின் பிற்பகுதி கொக்கியைப் போல் வளைந்திருந்தபடியால், அது தரையில் மாட்டிக் கொண்டது. லாக்லி மிகவும் எச்சரிக்கையோடு தப்பி னார். ஸ்காட்டும் ஈவான்ஸூம் பள்ளத்தினுள்ளே வண்டி யின் கைப்பிடியைப் பற்றிக்கொண்டு தொங்கினார்கள். பிடியை விட்டாலோ கீழே ஆழ்ந்த குழியில் வீழ்ந்து உயிர் துறக்கவேண்டியதுதான். என்ன செய்வதென்று தோன்றாமல் இருவரும் திகைத்திருக்கும்போது, ஸ்காட் தமது கால்களுக்கருகில் அப்பனிச் சுவர் சற்று நீண் டிருந்ததைக் கண்ணுற்றார். அவர் மெதுவாக அவ்

விடத்தில் தம் கால்களை ஊன்றி- லாக்லியின் உதவி யால் வெளியேறினார். பின்னர், லாக்லியும் ஸ்காட்டும் சேர்ந்து ஈவான்ஸை வெளியேற்றினார்கள். இவ்வித மாகப் பயணஞ் செய்துகொண்டு டிசம்பர்மாதக் கடைசி யில் மூவரும் கப்பலை அடைந்தனர்.

இங்கிலாந்துக்குத் திரும்புதல்

1904-ஆம் ஆண்டின் தொடக்கத்திலேயே இங்கி லாந்துக்குப் புறப்பட்டுவிடவேண்டும் என்று ஸ்காட் திட்டம் போட்டிருந்தார். ஆனால் அவர்களுடைய கப் பலைச் சுற்றிலும் பனி உறைந்து இருந்தது. பிப்ரவரி தொடக்கத்தில்தான் பனி கரையத்தொடங்கும். அப் போதுகூடக் கப்பலைச் சுற்றிப் பன்னிரண்டு கல் தொலை பனிக்கட்டியாகவே இருக்கும். ஆதலால் பல பணியாட்க ளைக்கொண்டு பனிக்கட்டியை உடைக்க முயன்றார்கள். அது மிகக் கடினமான வேலையாயிற்று. ஆதலால் ஸ்காட் பனிக்கட்டி உடைப்பதை நிறுத்தச்சொன்னார். அப் போது உதவிக் கப்பல்கள் இரண்டு வந்து சேர்ந்தன. மக்மர்தோ ஒலித்துறை அருகில் அவ்விரு கலங்களை நிறுத்திவிட்டு அவ்விரு கப்பல்தலைவர்களும் ஸ்காட் டிடம் வந்து வணங்கினார்கள். ஸ்காட்டையும் அவ ருடைய குழுவினரையும் அழைத்துவர அரசினர் தங்க ளைப் பணித்ததாகவும், பனியிற் சிக்கிய கலத்தை அங் கேயே கைவிட்டு உடனே தாய்நாடு மீளும்படி ஸ்காட் டுக்குக் கூறுமாறு அரசினர் அவர்களுக்குச் சொல்லிய தாகவும் கப்பற் றலைவர்கள் கூறினார்கள். அதைக் கேட்ட ஸ்காட்டும் அவருடைய குழுவினரும் மகிழ்ச்சி யும் துயரமும் ஒருங்கே கொண்டனர். அரசினர் தங்களை விரைவில் தாய்நாடு மீளும்படி பணித்து அதற்கான உதவியும் செய்ததனால் மகிழ்ச்சியும், ஈராண்டளவும்

தங்களுடைய இல்லமாயிருந்து காப்பளித்த பழம் பெருங் கலத்தைப் பனியிற் சிக்கவிட்டுச் செல்லுவதில் வருத்தமும் அடைந்தனர். எனினும், தாய் நாட்டிற்குக் கடுகிச் செல்லவேண்டும் என்னும் பேராவல் அவர்களனைவரையும் தூண்டியதால், பழங் கலத்தைவிட்டுச் செல்லத் துணிந்தனர். ஆதலால், பழைய கப்பலிலிருந்த பண்டங்களைப் புதிய கப்பல்களில் சேர்க்கத் தொடங்கினார்கள். அப்போது ஒருநாள் திடீரென்று எவரும் எதிர்பாராதவண்ணம் பனி கரைந்தது. உடனே துணைக்கு வந்த இரு கலங்களின் உதவியால் பழைய கலத்தைப் பனியின் பிடியினின்று விடுவித்தனர். பிறகு அவர்கள் தங்கள் மூன்று கலங்களுடன் இங்கிலாந்துக்குத் திரும்பினார்கள். இங்கிலாந்துக்குத் திரும்பிய ஸ்காட்டும் அவருடைய துணைவர்களும் இங்கிலாந்து மக்களால் மிகச் சிறப்பாக வாழ்த்தப்பட்டார்கள். உலகமெங்கும் ஸ்காட்டின் பெயர் பரவியது.

இரண்டாம் பயணம்

ஐந்து ஆண்டுகள் கழிந்தன. ஸ்காட் மீண்டும் தென்முனை செல்லத் திட்டம் வகுத்தார். அதன்படி 1910-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 15-ம் நாள் [1]கார்டிப் துறையிலிருந்து [2]டெர்ரா நோவா என்னும் கப்பலில் அவர் புறப்பட்டார். அவரோடு [3]வில்ஸன், [4]ஓட்ஸ், [5]ஈவான்ஸ், [6]பவர்ஸ் என்பவர்கள் சென்றனர். நவம்பர் மாதம் 29-ஆம் நாள் [7]ஈவான்ஸ் முனையில் தங்கினார்கள். அவ்விடத்தில் தங்களுடைய திரும்புகால் பயணத்துக்கு வேண்டிய உணவுப்பொருளை வைத்துவிட்டுச் சென்றார்கள். 1911-ஆம் ஆண்டு முதல்நாள் அவர்கள் [8]87°

1. Cardiff. 2. Terra Nova. 3. Wilson. 4. Oates. 5. Evans. 6. Bowers. 7. Cape Evans. 8. 87° S. Latitude.

தெற்குக் கோட்டைக் கடந்தனர். ஜனவரி நான்காம் நாள் ஸ்காட்டும் அவருடைய நான்கு நண்பர்களும் தங்களுக்கு உதவியாக வந்தவர்களிடமிருந்து விடை பெற்றுப் பிரிந்து, தெற்கே சென்றனர்.

### தென்முனை அடைதல்

அம்மாதம் 17-ஆம் நாள் தென் முனையை அவர்கள் அடைந்தபோது, சிறிது தொலையில் ஏதோ கறுப்பான பொருள் தரையில் கிடப்பதை பவர்ஸ் என்பவர் பார்த்தார். அவர்களனைவரும் அதன் அருகே சென்று பார்க்க, அஃது ஒரு கறுப்புப்பை என்று அறிந்தார்கள். ஸ்காட் [1]மெல்போர்ன் நகரிலிருந்தபோது [2]அமண்சன் என்னும் நார்வே நாட்டாரிடமிருந்து ஒரு செய்தி பெற்ருர்; அச்செய்தியில் அமண்சன் தாமும் தென்முனை காணச் செல்லுவதாக மதீராவிலிருந்து அறிவித்திருந்தது, கறுப்புப் பையைக் கண்டதும் ஸ்காட்டின் நினைவிற்கு வந்தது. அமண்சன் தமக்கு முன்னரே தென்முனையை அடைந்துவிட்டார் என்று அவர்கள் அறிந்ததும், அவர்களனைவரும் மிகவும் வருத்தப்பட்டார்கள்; எனினும் தாங்களும் தென் முனை யடைந்ததுபற்றி அவர்கள் ஆறுதல் அடைந்தார்கள். ஒருநாள் அங்கேயே தங்கி அங்குக் காணப் பட்ட பறவைகள், விலங்குகள் முதலியவற்றை ஆராய்ந்தார்கள்.

### தென்முனை விலங்குகளும் பறவைகளும்

தென்முனையில் அவர்கள் பல அழகிய பறவைகளைப் பார்த்தார்கள். சில பறவைகளின் சிறகுகள்

1. Melbourne. 2. Amundsen.

நீலங் கலந்த பழுப்பு நிறமாயிருந்தன. அவை அச்சமின்றி ஸ்காட் குழுவினர் வேட்டையாடும்போது அவர்களைச் சுற்றி நின்றன. வேறு சில பறவைகளின் தலைகளும் சிறகுகளும் சிவந்தும், உடல் வெளுத்தும் இருந்தன. மற்றும் சிலவற்றின் சிறகுகளும் தலைகளும் கறுப்பு நிறமாயும், உடல் வெள்ளையாயும் இருந்தன. அவற்றின் உயரம் நான்கு அடி; எடை நூறு இராத்தல். தரையில் அவை நெடுந்தூரம் அணி அணியாக நின்றது பார்க்க மிகவும் அழகாக இருந்தது.

ஸீல் என்னும் ஒருவகை விலங்கு அங்கே இருந்தது. அதன் உடல் முழுதும் வெண்மையாயிருந்தது. அது நண்டுகளையும், மீன்களையும் பிடித்துத் தின்னும். ஸ்காட் குழுவினர் அதன் [1]ஈரலையும், [2]சிறுநீர்ப்பிரித்தியையும் மிகுந்த விருப்புடன் உண்டார்கள். பனித் தரையில் ஆங்காங்குப் பாசிகள் படர்ந்து மூடி இருந்தன; வேறெந்தச் செடிவகையும் அங்கே வளருவதில்லை.

## முனையினின்றும் திரும்புதல்

ஆங்கிருந்த இயற்கை அமைப்புகளைக் கண்ட ஸ்காட் குழுவினர், அமண்சன் அவர்களுக்கு முன்னால் தென்முனை யடைந்ததால் ஏற்பட்ட மனத் தளர்ச்சியை ஒருவாறு மாற்றிக்கொண்டு, ஜனவரி 19-ஆம் நாள் தென்முனையை விட்டுப் பயணமானார்கள். அவர்கள் புறப்படுமுன் அங்கே இங்கிலாந்து நாட்டின் ஐக்கியக் கொடியை நாட்டிப் புகைப் படமெடுத்துக்கொண்டார்கள். வடக்கு நோக்கித் திரும்பிச் சிறு தொலைவு சென்றதும், பனிப்புயலும்,

1. Liver. 2. Kidney.

பெரு மழையும் தொடங்கின. மிகுந்த வருத்தத்தோடு அவர்கள் மேற் சென்றனர். பனியின் தண்மை தாங்காமல் ஈவான்ஸ் நோயடைந்தார். அதனால், ஒரு திங்கள் அவர் வருந்தினார். கடைசியாகப் பிப்ரவரி 17-ஆம் நாள் உயிர் நீத்தார். ஸ்காட்டும் அவருடைய நண்பர்களுள் எஞ்சிய மூவரும் உளம் கலங்கினார்கள். தாய்நாட்டார் உயர்வுக்காக உயிர்துறந்த உத்தமர் ஆவி, உலகை ஈன்ற ஒருவனுடைய காப்பில் ஓய்வு பெற வேண்டுமென்று வணங்கி வேண்டி, உடைந்த உள்ளத்துடன் தம் வழிமேற் செல்லத் தொடங்கினார்கள்.

## இன்னல்கள் தொடர்தல்

வடக்கே செல்லச் செல்லக் குளிர் மிகுந்தது. ஓட்ஸூம் குளிர் தாங்க முடியாமல் மிகவும் வருந்தினார். தம்மை அழைத்துச் செல்லுவதற்காக நோயற்ற தம் நண்பர்கள் வருந்துவதை அவர் விரும்பவில்லை. தம் நண்பர்கள் தமக்கு முன்னால் சென்றுவிடவேண்டுமென்றும், தாம் பின்னர் அவர்களைப் பின்தொடர்ந்து வருவதாகவும் சொன்னார். ஸ்காட் அதற்கு இணங்கவில்லை. அவ்வாறு ஒரு திங்கள் கழிந்தது. அவர்கள் ஓர் இரவு உணவருந்தியபின் படுத்துக்கொண்டார்கள். ஓட்ஸ் உறங்கவில்லை. மறுநாள் காலை பனிமழை மிகுதியாய்ப் பெய்துகொண்டிருந்தது. தாம் வெளியே செல்லுவதாகவும், திரும்பிவரச் சற்றுத் தாமதமாகுமென்றும், ஓட்ஸ் தம் நண்பர்களிடம் கூறிவிட்டுக் கூடாரத்தைவிட்டு வெளியேறிப் பனிமழையிற் புகுந்து மறைந்தார். நெடுநேரமாகியும் அவர் திரும்பாதது கண்ட அவருடைய நண்பர்கள் ஓட்ஸ் மரித்திருப்பாரென்று தெரிந்துகொண்டார்கள்.

## பறவைகள் அனைத்தும் பறந்து சென்றன

ஸ்காட்டும் அவர் நண்பர்களும் மிகுந்த வருத்தத்தோடு மேற்சென்றனர். ஓயாத அலைச்சலாலும், நண்பர்கள் மரித்ததனால் மனமுடைந் திருந்ததனாலும், அவர்கள் உடலும் மிகவும் நலிந்தன. நாளொன்றுக்கு மூன்று கல் தொலை நடப்பதே அவர்களுக்கு வருத்தமாயிற்று. மிக மெதுவாக நடக்க நேர்ந்ததால், உணவுக் களஞ்சியத்தை அடைவதற்கு ஒரு வாரத்திற்கு முன்னமேயே அவர்கள் உணவுப் பொருள்கள் தீர்ந்துவிடும்போலிருந்ததால், வழக்கமாக உண்ட உணவுப் பொருளையும் குறைத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. மார்ச் திங்கள் 21-ஆம் நாள் அவர்கள் ஈவான்ஸ் முனைக்குத் தெற்கே பதினொரு கல் தொலைவிலுள்ள ஓரிடத்தை அடைந்தனர். களைப்பு மேலிட்டதால் அங்கேயே தங்குவதற்குக் கூடாரம் அமைத்துக்கொண்டார்கள். அப்போது அவர்களிடம் இரண்டு வேளைக்கு மட்டும் உணவு இருந்தது. அங்கு தங்கிய பிறகு நான்கு நாட்கள் விடாமல் பனி மழை பெய்தது.

## [1] துணைக்குழுவினர் கண்டது

குறித்த காலத்திலே ஸ்காட்டும் அவருடைய குழுவினரும் மீளாமையால் இங்கிலந்து அரசினர் ஒரு துணைக்குழுவினரை அனுப்பி, அவர்களை அழைத்து வருமாறு பணித்தார்கள். அவ்வாறே அவர்கள் சென்று பார்த்தபோது ஸ்காட்டும் அவருடைய துணைவர்களும் கூடாரத்தில் உயிர் துறந்து கிடந்தனர். ஸ்காட்டினுடைய குறிப்புப் புத்தகத்தில், "நாங்கள் நாடு திரும்பும் பேறு பெற்றிருந்தோமானால் நானும் என்

1. Relief Party.

துணைவர்களும் அடைந்த வருத்தத்தை ஆங்கிலேயர்களுக்குக் கூறி அவர்கள் உரோமம் சிலிர்க்கும்படி செய்திருப்போம்,'' என்று வரையப்பட்டிருந்தது. தேடு குழுவினர் அங்கே ஸ்காட் குழுவினர் ஒவ்வொருவருடைய நினைவுக்குறியாகவும் ஒவ்வொரு சிலுவை நாட்டி இங்கிலந்துக்கு மீண்டனர். ஸ்காட் மரித்தது கேட்ட ஆங்கிலேயர் அனைவரும் மிகுந்த துயரமடைந்தார்கள். தங்கள் நாட்டுஅறிஞர்களும் தென்முனை அடைந்துவிட்டனர் என்னும் நினைப்பு அவர்களுக்கு ஒருவாறு ஆறுதலளித்தது.

## ஸ்காட்டின் பெருமை

நாடு கண்டவர்களுள் மிகவும் போற்றப்படவேண்டிய ஒருவர் ஸ்காட். தென்முனை காணச் செல்லுவதில் ஏற்பட்ட இடையூறுகளை அவர் நன்கு அறிந்திருந்தார். எனினும் உண்மையைக் கண்டறியும் ஆவலால் அவர் தம் உயிரையும் பொருட்படுத்தாது பயணம் போனார். அத்தகைய சான்றோர் பலருடைய நன்முயற்சியாற்றான் நாம் இப்போது பல நாடுகளைப்பற்றிய உண்மைகளை அறியப்பெற்றோம்.

## ரு. பிரான்ஸிஸ்கோ பிஸாரோ

### ஐரோப்பியரும் அமெரிக்காவும்

கொலம்பஸ் அமெரிக்கா கண்டத்தைக் கண்டு பிடித்த பிறகு, ஐரோப்பிய மக்கள் அந்நாட்டைப் பற்றிச் செவ்வனே அறிந்துகொள்ள முயன்றனர். பற்பல நாட்டு அரசினரும் தத்தம் நாட்டிலிருந்த வன்மை மிக்க கம்மியர்களை அமெரிக்காவைப் பற்றிய முழுவிவரமும் அறிய அக்கண்டத்தின் பற்பல பிரிவுகளுக்கும் அனுப்பினர். அவ்வாறு அமெரிக்கா சென்று மீண்டவர்களுள், கல்வியறிவற்ற பலர் அமெரிக்க நாட்டில் மலைகள் எல்லாம் பொன்னாலானவை எனவும், ஆறுகளின் இருமருங்கிலும் மணிகள் சிதறிக்கிடந்தன எனவும், அவ்வாறுகளில் முத்துக்கள் நிறைந்திருந்தன என்வும் அந்நாட்டின் செல்வ வளத்தைப் பன்மடங்கு மிகைப்படுத்திக் கூறலாயினர். அவற்றைக் கேட்ட ஐரோப்பிய மக்களுட் பெரும்பான்மையோர் அமெரிக்காவைக் காணப் பேராவல் கொண்டார்கள். பற்பல நாடுகளிலிருந்து பலர் அமெரிக்காவுக்குப் போனார்கள்.

### பிஸாரோ

அவ்வாறு அமெரிக்கா சென்ற ஸ்பெயின் நாட்டினருள், [1]பிரான்ஸிஸ்கோ பிஸாரோ என்பவர் ஒருவர். சிறுவராயிருந்தபோது அவர் ஒரு செல்வருடைய பன்றிகளை மேய்த்து வயிறு வளர்த்தார். நாளடைவில் அவருக்கு அவ்வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டது. அமெரிக்காவுக்குச் சென்றால், தாம் ஒரு செல்வராக வாழலாம் என நினைத்தார். ஆதலால், கப்பற்றலை

1. Francisco Pizarro.

வர்கள் பலரை அணுகித் தம் விருப்பத்தைத் தெரிவித் தார். [1]பல்போவா என்னும் கப்பற்றலைவர் பிஸாரோ விடம் இரக்கம் கொண்டார். பல்போவா ஏன் அவ ரிடம் இரக்கம் கொண்டார்?

## பல்போவா

பல்போவா முதலில் அமெரிக்காவை அடுத்த [2]சான் டொமிங்கோ என்னும் தீவில் ஒரு பயிரிடுவோராக இருந்தார். அத்தொழிலில் அவருக்குப் போதுமான ஊதியம் கிடைக்கவில்லை; மாருகக் கடன் பெருகிற்று. ஆதலால் தாம் வேறேதேனும் ஒரு சிறந்த தொழிலைக் கைக்கொள்ள வேண்டுமென்று விரும்பினர். அப் போது அவர் அமெரிக்கா செல்ல விரும்பினர். ஆனல், அதற்கு வேண்டிய பொருள் அவரிடமில்லை. பொருளி லாக் குறையால், அமெரிக்கா சென்று பொருள் தேடாவிடில், அதிவிரைவில் தாம் கஞ்சிக்கும் பஞ்சாய்ப் பறக்க நேரும் என்பதைப் பல்போவா நன்குணர்ந்தார். நண்பர்கள் பலரை அணுகித் தமக் குப் பொருள் கடனுகத் தரும்படி வேண்டினர். பெரும் பொருள் படைத்தோர் பலர் பல்போவா ஒரு வறிஞர் என அறிந்தோராதலால், அவருக்குப் பொருள் உதவி செய்ய மனமின்றிப் பொய்ச்சாக்குக் கூறிப் போது கடத்தினர். அவருக்குப் பொருள் உதவ மிகவும் விரும்பிய இரண்டொரு நண்பர்கள் தாம் எதிர்பார்த்த பொருள் கிட்டாமையால் வருந்தினர். ஆதலால், பல்போவா அமெரிக்கா செல்ல ஒரு சிறு சூழ்ச்சி செய்தார். ஓரிரவு அவர் எவருமறியாவண்ணம் கப்பற்றுறையை அடைந்து, அங்கே அமெரிக்கா

1. Balboa. 2. San Domingo.

வுக்கு ஏற்றுமதி செய்வதற்கென வைக்கப்பட்டிருந்த வெற்றுப்பெட்டி ஒன்றினுள் புகுந்துகொண்டார். கப்பல் நடுக்கடலை யடைந்ததும், எவருமறியா வண்ணம் பெட்டியை விட்டு வெளிவந்து, கப்பல் மேற்றளத்தை யடைந்து, அங்கிருந்தவர்களோடு சேர்ந்து உறங்கினார். பிறகு அங்கிருந்தவரோடு நட்புக்கொண்டு அவர்களுள் பலருடைய உதவியைப் பெற்று, ஒரு சிறந்த கப்பற்றலைவரானார்.

## பல்போவாவும் பிஸாரோவும்

இளமையில் வருந்தி முயற்சியால் உயர்நிலை யடைந்த பல்போவாவுக்குப் பன்றி மேய்க்கும் பிஸாரோவைக் கண்டதும், தம்முடைய இளமையில் நேர்ந்த இன்னல்கள் நினைவிற்கு வந்தன. எனவே, தம்மைப்போன்று வருந்தும் பிஸாரோவை மேல்நிலைக்குக் கொண்டுவரவேண்டுமென்று அவர் விரும்பியதில் வியப்பேதுமில்லை யன்றோ! ஆதலால், அவர் தாம் சென்ற பயணங்களில் எல்லாம் பிஸாரோவைத் தம் துணைவராகச் சேர்த்துக்கொண்டார். அவ்வாறு ஒரு சிறந்த தலைவரிடம் நாடு கண்டறிவதில் பயிற்சி பெற்றமையால், பின்னர் தாமே பல பயணக் குழுவினரின் தலைவராகிப் பல நாடு செல்லும் பேற்றைப் பிஸாரோ பெற்றார்.

## பிஸாரோ அமெரிக்கா செல்லுதல்

[1] பனமாவிலிருந்து பிஸாரோ தென்னமெரிக்கா செல்ல விரும்பினார். ஸ்பெயின் நாட்டுப் போர்வீரரான [2] அல்மேக்ரோ என்பவரையும், பனமாவிலிருந்த ஸ்பெயின் நாட்டுக் கிறித்து நெறித் தலைவர் ஒருவரையும் அணுகித்

1. Panama. 2. Almagro.

தமக்கு வேண்டிய பொருள் உதவிபெற்றார். அவ்வாறு பிஸாரோக்கு உதவிய அவ்விருவரும் அவருடைய முயற்சியில் மிகவும் ஊக்கம் கொண்டனர். அல்மேக்ரோ சிறந்த போர்வீரராதலால், பிஸாரோவின் துணைவராகச் செல்லுவதற்கு மிகவும் விரும்பினார். கிறித்துநெறி யிறைவர் பிஸாரோ பொருள் வேண்டிய போதெல்லாம் இல்லையென்னாது கொடுத்தார். அல்மேக்ரோவை விட அதிகப் பொருள் கொடுத்தவர் கிறித்துநெறித் தலைவர்தாம். கலம் கட்டிய பிறகு, கம்மியரைக் கூட்டும்பணி சற்று வருத்தமானதா யிருந்தது. மிகுந்த முயற்சியுடன் ஒரு நூறு கம்மியர்களைச் சேர்த்தனர். அனைவரும் 1524-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 24-ஆம் நாள் பனாமாவை விட்டுப் புறப்பட்டார்கள். ஒரு சிறு கலஞ்சமைத்துக்கொண்டு, சின்னாட்களில் அல்மேக்ரோவும் அவர்களைப் பின் தொடர்ந்தார்.

பயணம்

முதலில் அவர்கள் [1]முத்துத்தீவு எனப்படும் இடத்தை அடைந்தனர். அது பனாமாவுக்குத் தென்கிழக்கில் உள்ளது. பிறகு அங்கிருந்து புறப்பட்டுக் கரையோரமாகவே அவர்கள் தங்கள் கலத்தைச் செலுத்தினர். செல்லும்போது, பிஸாரோ கரையை நோக்கிய வாறே, ஏதேனும் குடில்களோடு மாந்தர் எவரேனும் புலப்படுகின்றார்களோ வென்று உற்றுநோக்கிக் கொண்டு போனார். சில வாரங்கள் கழிந்தன; புயல் வீசியது. கப்பல் தத்தளித்தது. புயலில் அவர்கள் மிகுந்த அல்லற்பட்டு மேற்சென்றனர். புயல் ஓய்ந்ததும், அவர்களுக்கு வேறொரு பெருங்கவலை ஏற்பட்டது.

1. Isle of Pearls.

குடிநீர் குறைந்துவிட்டது. உணவுப் பொருள்களும் மிகவும் குறைந்துவிட்டன. எங்காவது ஓரிடத்தில் கலத்தை நிறுத்திக் கரையருகில் உள்ள ஊரிலிருந்து குடிநீரும், 'உணவுப் பொருள்களும் வேண்டியவளவு சேர்த்துக்கொண்டு பயணம் தொடங்கவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆதலால், கலத்தை ஓரிடத்தில் நிறுத்தி, அனைவரும் கரைக்குச் சென்றனர்.

## காட்டத்தியும் கலவரமும்

அவ்விடத்தில், காட்டுஅத்திமரங்கள் நிறைந்திருந்தன. அனைவரும் மிகவும் விருப்பத்தோடு காட்டத்திக்காய்களைப் பறித்துத் தின்றனர். கரையோரத்தில் மக்கள் வாழும் அறிகுறிகள் தென்படவில்லை. உள்நாட்டில் யாரேனும் மனிதர்கள் இருக்கின்றார்களோவென அறிய பிஸாரோ விரும்பினார். உள்நாடு செல்லுவதற்கான ஆயத்தம் செய்துகொண்டிருக்கையில், அத்திக்காய்களைத் தின்றவரனைவரும் வாந்தியெடுத்து மயக்கமுற்று வீழ்ந்தனர். பிஸாரோ அவர்களுடைய மயக்கத்தைத் தெளிவித்து ஓய்வு எடுத்துக்கொள்ளச் செய்தார். பிறகு, தம் குழுவினரிற் சிலரை அழைத்து, முத்துத் தீவுகளுக்கு மீண்டும் சென்று, கலம் நிறைய உணவுப்பொருள்களைச் சேர்த்துக்கொண்டு தாங்கள் இறங்கி இருந்த இடத்திற்கு வரும்படி பணித்து, எஞ்சி யிருந்தவர்களுடன் உள்நாட்டிற்குள் சென்றார்.

## உள்நாட்டுக் குடிகள்

உள்நாட்டில் சிறிது தொலையில் அடர்ந்த காடு ஒன்று இருந்தது. அக்காட்டுக்குள் நுழைந்ததும் ஒரு சிற்றூரை அவர்கள் பார்த்தார்கள். அவ்வூரில் ஆங்

காங்கு மக்கள் நின்று பேசிக்கொண்டிருந்தனர். அவர்க ளனைவரும் பிஸாரோவையும் அவர் குழுவினரையும் கண்டவுடன் அஞ்சி ஓடிவிட்டார்கள். பிஸாரோ மிகவும் எச்சரிக்கையாக முன் சென்றார். அங்கிருந்த குடிசை களில் இருந்த தேங்காய்களையும், சோளத்தையும் கண்டு அவர் மகிழ்ந்தார். பின்னர் அச்சமும் ஐயுறவும் கலந்த குறிப்புடன் நின்றுகொண்டிருந்த உள்நாட்டுக் குடி மக்களைத் தம்மருகில் வருமாறு குறிப்பிட்டார். அவர் களும் அவ்வாறே வந்தார்கள். அவர்கள் தங்கள் கைகளி லும் கால்களிலும் கனத்த பொற்காப்புகளை அணிந் திருந்தார்கள். அதைக்கண்டு ஸ்பெயின் நாட்டினர்க்கு மகிழ்ச்சி மிகுந்தது. தாங்கள் தேடிவந்த பொன்னும் மணியும் மலியும் நாடு மிக அருகிலேயே இருக்கவேண்டு மென்று அவர்கள் நினைத்தார்கள். தாங்கள் உண்ணப் போதுமான உணவு கிடைக்காமல் தாங்கள் வருந்து வதைக்கூட அவர்கள் மறந்தார்கள். நண்பர்களுட் சிலர் காய்ச்சலால் மரித்தமை கண்டு, மனந் தளர்ந்து, மீண்டும் பனமா சென்றுவிடலாம் என்று முன்னர் நினைத்த மாலுமிகள்கூடப் பொன்னைக் கண்டவுடன் தங்கள் தென்திசைப் பயணத்தை மேலும் தொடர் வதற்கு, விரைவாக முத்துத்தீவிலிருந்து கப்பல் மீள வில்லையே யென விருப்புடன் கப்பல் வரும் வழியை நோக்கினர். என்னே பொன்னின் உயர்வு !

## கலகம் விளைக்கும் குடிகள்

ஒருநாள் முத்துத் தீவிலிருந்து உணவுப்பொருள்க ளுடன் பிஸாரோவின் நண்பர்கள் திரும்பினார்கள். உடனே அனைவரும் தங்களுடைய பயணத்தைத் தொடங்கினார்கள். முன்போலவே பிஸாரோ கரையை

நோக்கியவாறே சென்றார். தெற்கே செல்லச் செல்லச் சின்னஞ்சிறு குடில்கள் நிறைந்து காணப்பட்டன. ஓர் இடம் ஓர் ஊர்போல் காணப்பட்டது. அவ்விடத்தை நன்கு ஆராயவேண்டுமென்று பிஸாரோ விரும்பினார். கப்பலைக் கரையருகே நிறுத்திக் கரை சேர்ந்தார். போர் வீரர் சிலருடன் ஒருவரை முன்னால் அனுப்பி, அவ்வூரா ருடைய தன்மையை உளவறிந்து வருமாறு சொன்னார். கலத்திலிருந்து பலர் இறங்குவதைக் கண்ட அவ்வூர்க் குடிகள் ஓட ஆரம்பித்தார்கள். அவர்கள் போர்ப் பயிற்சி பெற்றவர்கள். பிஸாரோவும் அவருடைய துணைவரிற் பலரும் கரையில் தங்கிவிட்டதை அறிந்ததும் அவர்கள் முன்னேறி வந்துகொண்டிருந்த ஸ்பெயின் நாட்டுப் போர் வீரர்களைத் தாக்கினார்கள். மற்றொரு பிரிவினர் கரையில் தங்கியிருந்த பிஸாரோ வையும் அவர் துணைவரையும் தாக்கினார்கள். ஸ்பானியர்கள் மிக்க திறமையுடன் போரிட்டு அவர்களைத் துரத்தினார்கள்.

## பிஸாரோவின் திகைப்பு

பிறகு, பிஸாரோ தம் துணைவர்கள் அனைவரையும் அழைத்துக்கொண்டு கப்பலுக்குத் திரும்பினார். பயணத்தைத் தொடர்ந்து முடிக்க அவர்கள் தயங்கினார்கள். தெற்கே செல்லச் செல்ல மக்கள் மிகவும் முரடர்களா யிருப்பின் அவர்கள் தம்மைத் தாக்காம லிருக்கவும், கட்டாயமானால் அவர்களைத் தாங்கள் தாக்கவும் வேண்டிய ஆள்வலி தம்மிடமில்லை என்று உணர்ந்த பிஸாரோ, மீண்டும் பனாமாவுக்கே திரும்பி விடலாமென்று நினைத்தார். அவருடைய அகக்குறிப் புணர்ந்த நண்பர்கள் கலம் மிகவும் நிலைகேடுற்று இருந்ததாலும், தெற்கே குளிர் மிகவும் அதிகரிக்கக்

கூடுமாதலாலும், பனுமாவுக்கு மீளுவதே சாலச் சிறந்தது என்று கூறினார்கள். ஆதலால் பிஸாரோ பனுமாவை நோக்கித் திரும்பினார். அவரைத்தொடர்ந்து வந்த அல்மேக்ராவும், [1]சான்ஜுவன் ஆறு வரையில் சென்று பிஸாரோவைக் காணமல் வாட்டத்துடன் பனுமாவுக்கு வந்து சேர்ந்தார்.

## இரண்டாம் பயணம்

பனுமா திரும்பினும், பிஸாரோ தம் முயற்சியைக் கைவிடவில்லை. முதற் பயணத்தில் தமக்குற்ற இடர்களைப் பிஸாரோ மறக்கவில்லை. இரண்டாம் பயணத்திற்கான ஏற்பாடுகளை மிகுந்த ஊக்கத்துடன் செய்யலானார். அவருடைய திட்டப்படி இரு கலங்கள் சமைக்கப்பட்டன. [2]உரூயிஸ் என்னும் சிறந்த மாலுமி கலஞ் செலுத்தும் பணியை மேற்கொண்டார். துணைவர் பலர் சேர்க்கப்பட்டனர். போர்க் கருவிகள் கலங்களில் குவிக்கப்பட்டன. ஒருநாள் அல்மேக்ரோவுடன் அனைவரும் மறுமுறை பனுமாவிலிருந்து புறப்பட்டுத் தெற்கே சென்றனர். சான்ஜுவன் ஆற்றின் வடபகுதியிலுள்ள மக்களைப் பற்றிப் பிஸாரோ ஒருவாறு அறிந்துகொண்டாராதலால், வழியில் எங்கும் காலத்தைக் கழிக்காமல் நேரே சான்ஜுவன் ஆற்றை அடைந்து கலத்தைவிட்டுத் தம் நண்பருடன் இறங்கினார்.

## ஸ்பெயின் நாட்டினர் ஐயம்

அனைவரும் கரையேறியவுடன், கடற்கரையையடுத்த ஒரு சிற்றூருக்குள் நுழைந்தனர். உள்ளூரார் சிலரைக் கண்டு மிகுந்த அன்போடு பேசினார்கள். அவர்கள் அணிந்திருந்த பொன் வளையல்களிற் சில

1. The Sanjuan River 2. Ruiz.

வற்றைப் பிஸாரோ குழுவினர் பெற்றுக்கொண்டனர். பொன் வளையல்களைக் கண்ட அல்மேக்ரோவின் ஆசை பன்மடங்கு பெருகியது. தெற்கே செல்லச் செல்ல உள்நாட்டு மக்களுடைய செல்வம் பெருகிக் காணப்பட்டமையால், தாங்கள் கண்டு பிடிக்கப் போகும் [1]பெருவியா நாட்டில் மணியும் முத்தும் மிகுந்து காணப்படுமென அவர்கள் நினைத்தார்கள். செல்வம் மலிந்த நாட்டினர் தங்களுடைய செல்வப் பொருள்களைப் பிற நாட்டாருக்குக் கொடுப்பார்களோ வென்னும் ஐயப்பாடு அவர்களுக்கு உண்டாயிற்று. எவ்வாறாயினும் பெருவியா நாட்டில் காணப்படும் விலையுயர்ந்த பொருள்களைக் கொண்டுவந்தாக வேண்டுமென்று ஸ்பெயின் நாட்டினர் உறுதிகொண்டிருந்தனர் பெருவியரோடு போராடி வெற்றிபெறவேண்டிய வீரர்கள் தம்மிடம் இல்லை யென்றும், ஆங்காங்குத் தங்கும்போது உள்நாட்டினரால் இன்னல் நேரா வண்ணம் காத்துக்கொள்வதற்கு மட்டுமே ஆட்களைக் கொண்டு வந்திருப்பதாகவும் பிஸாரோ கூறினார்.

### அல்மேக்ரோவின் சூள்

அல்மேக்ரோ ஒரு புதிய சூள் கூறினார். தாம் ஒரு கலத்துடன் மீண்டும் பனாமா சென்று, வீரர்களையும், உணவுப் பொருள்களையும் கொண்டுவருவதாகச் சொன்னார் பிஸாரோ அதற்கு உடன்பட்டாரெனினும், அல்மேக்ரோவுடன் மக்கள் வர விரும்புவார்களோ வென்று அவர் ஐயுற்றார். அன்றியும் அனைவரும் கடலில் ஊறு ஒன்றும் ஏற்படாமல் பெருவுக்குச் செல்லவேண்டுமே யென்றும், அவர் கவலை

1. Peruvia.

யுற்ருர். உள்நாட்டுக் குடிகளிடமிருந்து தாம் பெற்ற பொற் காப்புகளைப் பஞமா மக்கள் கண்டால், அவர் களும் பெருவிற்கு வர மிக விரும்புவார்களாதலால், ஆள் சேர்ப்பது எளிதேயாகும் என்றும், உருயிஸ் தெற்கே சென்று கடற்கரை யமைப்பை நோக்கி மீண்டால், அனைவரும் இடையூறின்றிப் பெருவிய நாட்டை யடையலாம் என்றும், அல்மேக்ரோ சொன் ஞர். அல்மேக்ரோ கூறியதை அனைவரும் ஏற்றுக் கொண்டனர். அவர் மீண்டும் பஞமாவுக்குப் பயண மாஞர். உருயிஸ் தெற்கே சென்று கடற்கரை யமைப்பை ஆராய்ந்தார். பிஸாரோவும், அவருடைய நண்பர்களும் சான் ஜுவன் ஆற்றை யடுத்த இடங்களை ஆராயச் சென்ருர்கள்.

## பிஸாரோவின் பெருந் தொல்லை

பிஸாரோவும், அவருடைய துணைவர்களும் நாள் தோறும் அடர்ந்த காடுகளையும், முதலைகள் நிறைந்த ஆறுகளையும், பெரும் பள்ளங்கொண்ட பாறைகளையும் கடந்து, அப்பிரிவைப் பற்றி ஆராய வேண்டியிருந் தது. அடிக்கடி உள்நாட்டினர் அவர்கள் தனித் திருக்கும்போது அவர்களைத் துன்புறுத்திஞர்கள். ஆதலால் பிஸாரோவுக்கு மனக்கவலை மிகுதியும் ஏற்பட்டது. ஒருநாள் பிஸாரோவின் குழுவினரிற் பதிஞன்குபேர் ஓராற்றின் வழியே சென்றனர். பொழுது போகும் நேரமாகியும், அவர்கள் மீளாதது கண்ட பிஸாரோ, தம் துணைவரோடு அவர்களைத் தேடிச் சென்ருர். ஓரிடத்தில் அவர்கள் பயணஞ் சென்ற படகு கவிழ்ந்து கிடந்தது. துணைவரைப் பற்றிய செய்தி யொன்றும் தெரியவில்லை. பிஸாரோ

வும், அவர் குழுவினரும் மனங் கலங்கி இருப்பிடத்துக்குத் திரும்பினார்கள். அக்காட்டில் அழகுற விளங்கிய மண மலர்களையும், பச்சைக் கிளிகளையும் பலநிறப் பறவைகளையும் கண்டதால், அவர்களுடைய கவலை ஓரளவு குறைந்தது. நாள் ஆக ஆக உணவுப் பொருள் குறைய ஆரம்பித்ததும் பிஸாரோ பெருங் கவலை கொண்டார்.

### உரூயிஸ் மீளுதல்

ஓர்நாள் உரூயிஸ் தம் கப்பலில் திரும்பி வருவதைக் கண்டு பிஸாரோ பெருங் களிப்புக்கொண்டார். அவர் கரையடைந்ததும் பிஸாரோ, உரூயிஸை அவர் தம் பயணத்தில் கண்டவற்றைப்பற்றிக் கேட்டார். உரூயிஸ் தாம் கண்ட புதுமைகளைக் கூறலானார். "நான் நெடுந்தொலை சென்றதும், கரையோரமாகப் பார்த்துக் கொண்டே போனேன். ஒருநாள் நான் ஒரு பெரிய கப்பலைப் பார்த்தேன். அதை உள்நாட்டு மக்களே செலுத்தி வந்தனர். அதைப் பார்த்ததும் என்னுடைய வியப்பு பன்மடங்கு மிகுந்தது. அவர்கள் பொன் நகைகளை அணிந்திருந்தார்கள். நான் அவர்களை 'எங்கிருந்து வருகிறீர்கள்?' என்று கேட்டேன். [1]தும்பியாழ் என்னுமிடத்திலிருந்து வருவதாக அவர்கள் கூறினார்கள். நான் பார்த்தவர்களுள் அவர்களே மிகவும் பண்புடையோராவர். நான் அவர்களோடு நட்புக் கொண்டேன். பிறகு, நான் தெற்கே சென்றேன். உலக நடுக்கோட்டைத் தாண்டிச் சிறிது தொலை தெற்கே சென்று, [2]பாஸாடோ முனை கண்டு மீண்டேன். அமெரிக்காவின் மேற்குப் பகுதியில் உலக நடுக்கோட்

1. Tumbez. 2. Cape Passado.

டைக் கடந்த முதல் ஐரோப்பியன் நான்தான்," என உரூயிஸ் பெருமையுடன் கூறினார். உரூயிஸ் கூறிய தைக் கேட்ட பிஸாரோ பெருங்களிப்புற்றார்.

### பயணம் தொடர்தல்

உரூயிஸ் மீண்ட சின்னாட்களில் அல்மேக்ரோவும் திரும்பி வந்தார். அவரோடு எண்பது வீரர்கள் வந்திருந்தனர். உணவுப் பொருள்களையும் அவர் கொண்டுவந்திருந்தார். ஆதலால், பிஸாரோ தம்முடைய கவலையை மறந்து, தம் துணைவருடன் தம்முடைய பயணத்தைத் தொடங்கினார். தெற்கே செல்லச்செல்ல சோளக் கொல்லைகளும், உருளைக்கிழங்கு பண்ணைகளும் மிகுந்து காணப்பட்டன. ஆதலால், 'அவை அந்நாட்டு மக்களின் வாழ்க்கைப் பண்பின் ஓர் அறிகுறி. அங்குள்ள மக்களும் முரடர்களாக இருக்கமாட்டார்கள்' என்று பிஸாரோ நினைத்தார். ஆயினும், அவர்களனைவரும் அயல் நாட்டினரைப் பகைப்பவர்களாக இருந்தால், தம்முடைய திட்டம் நிறைவேறாதே என்று பிஸாரோ கவலையுற்றார்.

### மனிதக் குதிரை

பிஸாரோவும் அவருடைய துணைவர்களும் ஓரூரில் தங்கியிருந்தபொழுது, உள்நாட்டுமக்கள் போர்க்கருவிகளுடன் கடற்கரைக்குப் போனார்கள். அல்மேக்ரோவுடன் வந்திருந்த குதிரைவீரர்களுள் ஒருவன் அந்த ஊர் மக்களருகே சென்று, தன் குதிரையை அங்குமிங்கும் செல்லவிட்டான். அக் குதிரைவீரனை அம் மக்கள் மிகுந்த வியப்புடன் இமைகொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அதற்குமுன் அவர்கள் குதிரை வீரர்களைப் பார்த்ததே இல்லைபோலும்! ஆதலால்,

அவர்கள் அக்குதிரையையும், வீரனையும் ஒரே விலங்காக நினைத்து, அது புதிய விலங்கு என்றே மருண்டு பார்த்தார்கள். அவர்கள் அவ்வாறு வியப்புடன் பார்த்துக்கொண்டு நின்றபொழுது, குதிரை கால் வழுக்கிக் கீழே விழுந்தது. குதிரைவீரனும் தூக்கி எறியப்பட்டான். உடனே, குதிரை எழுந்து நின்றது. வீரனும் எழுந்து குதிரைமேல் ஏறிக்கொண்டான். அதுகண்ட உள்ளூர் மக்கள், "ஒரே விலங்கு நினைத்தமாத்திரத்தில் இரு பிரிவாகப் பிரிந்தும், பிறகு ஒன்றாகக் கூடியும் இயங்குகின்றதே! விந்தையினும் விந்தை! இது ஒரு மாயக்கார மானிட விலங்கு. இதைக் கொல்ல எவராலும் ஆகாது. இது முதுகின்மேலேயும் இரு கால்கள் நீண்ட உடலில் தொங்குகின்றனவே! இதன் நான்கு கால்களில் விரல்களே இல்லை. இரு கால்களில் மட்டும் விரல்கள் இருக்கின்றன. இந்த விலங்குக்குப் பேசக்கூடத் தெரியும்போலிருக்கின்றது. இதன் வாலில் மயிர் எவ்வளவு அடர்ந்திருக்கின்றது. இதைப் போன்ற பல விலங்குகள் அந்தக் கப்பலில் இருக்கின்றன போலும்! அவை கப்பலை நெருங்கியவுடனே இரு பிரிவாகப் பிரிந்துவிடுகின்றனவே! ஆம்! ஒரே விலங்காக இருந்தால் பளு மிகுந்து கலம் கடலுக்குள் அழுந்தி விடுமோ! இரு விலங்குகளாகப் பிரிந்தவுடன் அவ்வளவு பளு இருக்காதுபோலும்! இந்த விலங்குகள் தம்முடைய மாயத்தினால் அந்த மனிதர்களை அச்சுறுத்தி, ஏமாற்றி இருக்கின்றன. அவர்களையெல்லாம் ஒரு தனிக் காட்டிற்குக் கொண்டுபோய்க் கொன்று தின்று விடும்போலும்! அந்தோ! இந்த மனிதர்கள் அவைகளிடம் அவ்வளவு அன்புடன் பழகுகின்றார்களே!" என்றெல்லாம் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் அவ்

வாறு பேசிக்கொண்டிருந்ததை அறிந்த பிஸாரோவும், அவருடைய குழுவினரும் அந்நேரத்தையே தாங்கள் நழுவ ஏற்ற வாய்ப்பாகக்கொண்டு, கலத்திலேறித் தங்கள் இலக்கு நோக்கிச் சென்றார்கள்.

பனமா ஆளுவோர் சீற்றம்

அவ்வாறு, அவ்வப்போதும் உள்நாட்டினருடைய தொல்லை எதிர்பாராதவகைகளில் ஏற்பட்டு பிஸாரோ தம் தென்திசைப்பயணத்தைத் தொடர்ந்து நடத்துவதில் தடையும் ஏற்படுமென்று தோன்றியது. ஆதலால் மக்கள் வாழாத ஒரு தீவை அவர்கள் அடைந்தபோது, அல்மேக்ரோ மறுபடியும் பனமா சென்று பலரைத் துணைகொண்டு வரும் நோக்கத்தோடு புறப்பட்டார். பனமாவை ஆளுவோர் அல்மேக்ரோவினுடைய சொல்லைக் கேட்டதும் சீற்றமடைந்தார். தம்முடைய ஆள் ஒருவரை ஒரு காலத்தில் அனுப்பி, உடனே பிஸாரோவையும் அவருடைய குழுவினரையும் திரும்பவும் பனமாவுக்கே அழைத்து வருமாறு கூறினார்.

பிஸாரோவின் மனவுறுதி

ஆளுவோர் கூறியனுப்பிய செய்தி கேட்ட பிஸாரோ செய்வது இன்னதென்று அறியாமல் மலைத்துப்போனார். தாம் கண்டறிய விரும்பிய பெருநாட்டை அணுகிக்கொண்டிருக்கும்போது, துணை கேட்டனுப்பியதற்காக அரசினர் மீளும்படி பணித்திருந்தார். பிஸாரோவின் துணைவர்கள் அரசினருடைய கட்டளையை அறிந்ததும். 'பிற நாட்டில் நெடுநாள் அலைந்து அவ்வூர்க் குடிகளால் துன்புறுத்தப்படுவதைவிட பனமாவுக்குத் திரும்புவதே மேல்," என்று சொன்னார்கள். பிஸாரோ அவர்கள் சொன்னபடி நடக்காவிடில், அவர்கள் கலகம் விளைவிப்பார்களென்றும் பிஸாரோ

வுக்குத் தோன்றியது. தாம் மேற்கொண்ட பணியை முடிக்காமல் திரும்புவது பிஸாரோவுக்கு உடன்பா பாடில்லே. ஆதலால், மேற்கொண்ட பணியை முடித்து விட்டுப் பனமா திரும்புவதென்றும், காலங்கடந்து திரும்பியதற்காக அரசினர் தமக்கு விதிக்கும் தண் டனையை ஏற்றுக்கொள்ளுவதென்றும் பிஸாரோ துணிந்தார்.

### பனமா திரும்புபவர்களும், பெரு காணுவோரும்

பிஸாரோ கடற்கரையில் கிழக்கிலிருந்து மேற்கு நோக்கித் தமது உடைவாளினல் ஒரு கோடு கிழித்தார். வடதிசையைக் காட்டி, "அத்திசையில் பனமா இருக் கிறது. ஆங்குச் சென்ருல் நலமுற வாழலாம். ஆனல், புகழ் அற்ற வாழ்வுதான் வாழவேண்டும். நமது செல்வ மும் பெருக வழியில்லே. எனினும், பனமா செல்ல விரும்புவோர் இக்கோட்டின் வடபுறத்தில் நில்லுங் கள்," என்றும், "இதோ இந்தக் கோட்டின் தென் புறத்தில் பெரு இருக்கக்கூடும். அங்குச் செல்லுவது வருத்தம் மிகுந்தது. ஆனல், இன்னல்களைப் பொருட் படுத்தாது மேற்சென்ருல் வளமிக்க நாட்டைக் கண்டு பிடித்த பெருமை நம்மைச் சாரும். நான் பெரு செல்லு வேன். என்னுடன் வர விருப்பமுள்ளவர்கள் இக் கோட்டின் தெற்கே நில்லுங்கள்," என்றும் கூறித் தாம் அக் கோட்டின் தென்புறத்தே நின்ருர்.

### அரசினர் பதிலியின் பதட்டம்

ஸ்பெயின் நாட்டினருள் பதினெரு பேர்கள் பிஸா ரோவைத் தொடர்ந்து கோட்டின் தெற்கே நின்றனர். உரூயிஸும், அல்மேக்ரோவும் பனமா ஆளுவோருக்கு உற்றது உரைத்து, அவருக்கு இன்சொற் கூறி, அவருடைய சீற்றத்தைத் தணித்து, இயலுமானல்

வேறொரு கலத்தில் துணைவரும், உணவுப்பொருள் களும் தேடிக்கொண்டு பிஸாரோவுக்கு உதவத் திரும் பும் பெருநோக்குடன், பனமா செல்லுவோருடன் சேர்ந்து நின்றனர். பிஸாரோவின் உறுதி கண்டு உளக் கொதிப்புற்ற ஆளுவோரின் பதிலி கரையில் ஒருவருக் கும் உணவுப்பொருளை வைக்கலாகாதெனப் பணித் தான். ஆதலால், பன்னிரு வீரர்களை உணவின்றித் தனியே விட்டுவிட்டு, மற்றையோர் இரு கப்பல்களில் பனமாவுக்குத் திரும்பினார்கள்.

வீரர்கள் விடாமுயற்சி

ஒரு வேளைக்குக்கூட உணவு கொடுக்காமற் சென்ற பதிலியின் சீற்றங்கண்டு பிஸாரோ வருந்தினாரெனினும், உணவின்மை கருதி உளத்தளர்வடையவில்லை. தாம் வேறிடங்களுக்குச் செல்லுவதற்குத் தமக்கு ஒரு கலம் கொடுக்காமல் அவர் சென்றதுதான் பிஸாரோவின் மனத்தைப் பெரிதும் முறித்தது. உள்நாட்டினரால் இன்னல் ஏற்படாம லிருப்பதற்காகவே, அவர்கள் உணவுப்பொருள் எதுவும் கிடைக்காததொரு மக்களற்ற தீவை அடைந்திருந்தனர். கலங்களிருந்த வரையில் உணவுபற்றிய கவலை அவர்களுக்கு இல்லை. கலங்கள் பனமா நோக்கிப் புறப்பட்டுவிட்டன. பின்னர் பிஸா ரோவும், அவருடைய துணைவர்களும் வருந்தி உழைத்து, ஒரு மிதவை தயாரித்தார்கள். அருகிலுள்ள ஊரில் எங்கேனும் உணவு கிட்டுமாயின், அங்கேயே அல்மேக் ரோவும், உருயிஸும் திரும்பும் வரையில் தங்குவ தென்றும் தீர்மானித்தார்கள். மிதவையிற் சென்று, அருகிலிருந்த [1] கார்கோனு என்னும் தீவை அடைந் தார்கள்.

1. Gorgona.

### கார்கோனுத் தீவு

அங்கே குழிமுயல்களும், பறவைகளும் காணப் பட்டன. அவை உண்ணக்கூடியனவாயிருந்தன. தவிர வும், அங்கே அவர்களுக்குத் தொல்லை கொடுக்கக்கூடிய மக்களும் இல்லை. பிஸாரோவுக்கும், அவருடைய துணைவர்களுக்கும் குழிமுயல்களை வேட்டையாடுவதும், பறவைகளைப் பிடிப்பதும் நல்ல பொழுதுபோக்கா யிருந்தன. நாள் செல்லச் செல்ல அவர்களுக்கு அல்மேக் ரோவின் வரவுக்காகக் காத்திருப்பது மிகவும் வருத்த மான வேலையாயிற்று. அன்றியும், மழைகாலம் நெருங்கியது. நாள்தோறும் அவர்கள் கடலை நோக்கிய வாறே பாய்மரம் ஏதாவது புலப்படுகின்றதாவென்று கூர்ந்து நோக்குவார்கள். ஆறு திங்கள் கழிந்தன. அல்மேக்ரோ ஒருவேளை வராமல் பனுமாவிலேயே தங்கி யிருப்பாரோவென்று அவர்கள் ஐயமுற்றனர். ஏழு திங்கள் கழிந்ததும், ஒருநாள் அல்மேக்ரோவும், உருயி ஸும் துணைவர் சிலருடன் திரும்பி வந்தார்கள். அவர் கள் தாங்கள் புறப்படுவதற்கு ஆளுவோரிடமிருந்து அனுமதி பெறுதல் வருத்தமானதாய் இருந்ததால், காலம் தாழ்ந்ததென்று கூறினார்கள். அல்மேக்ரோ அவருடன் துணைவர் சிலரையே கொண்டு வந்திருப் பினும், அவருடைய வரவினுல் கார்கோனுத் தீவி லிருந்து தாம் மேற்செல்லக்கூடிய வாய்ப்பு தமக்குக் கிடைத்ததுபற்றி பிஸாரோ மகிழ்ந்தார்.

### பெருநாடு அடைதல்

உடனே, அவர்களெல்லோரும் [1]பெரு நோக்கிப் புறப்பட்டனர். இடையில் அவர்கள் எங்கும் தங்க

1. Peru.

விரும்பவில்லை. அவர்களுடன் சென்ற மக்கள் தொகை மிகவும் குறைந்திருந்தபடியால், அவர்கள் உள்நாட்டாரோடு சண்டையிடத் துணியவில்லை. அவர்கள் தும்பியாழ என்னும் பேரூரை அடுத்த ஒரு தீவில் உணவுப் பொருள் ஏற்றுவதற்காகத் தங்கினார்கள். உரூயிஸின் உள்நாட்டு நண்பர்கள் அவர்களுக்கு மிகுந்த உதவி செய்தார்கள். மக்களும் முரடர்கள் அல்லர்; மாறாக அயலவரை அன்புடன் போற்றும் அருங்குணம் கொண்டிருந்தனர். பிஸாரோ அவர்களைத் தம் கலத்துக்கு வரவேற்று, அவர்களை மகிழ்வூட்டினார். அவர்கள் தேங்காய், மீன், சோளம், வாழைப்பழங்கள், அன்னாசிப் பழம், இறைச்சி முதலியவற்றைப் பிஸாரோவுக்கு மிகுதியாகக் கொடுத்தார்கள்.

## பெருவியர் வாழ்வு

பெருவியர் பயிர்த்தொழில் செய்பவர். சிறந்த கால்வாய்களும், கிளைக் கால்வாய்களும் பயிர்த்தொழிலுக்கு வேண்டிய நீர்ப்பாசனங்களாா யமைந்திருந்தன. வாழை, அன்னாசி போன்ற பழப் பயிர்களும், உருளைக் கிழங்கு, மக்காச்சோளம் முதலியனவும் எங்கும் நிறைந்து அழகுற வளம்பெற்று விளங்கின. பல ஊர்களுக்கும் இடையிடையே சிறந்த வழிகள் இருந்தன. [1]அல்பாகா, [2]இலாமா என்னும் ஆடுகளின் உரோமத்தால் நெய்யப்பட்ட துல்லிய ஆடைகளை அவர்கள் அணிந்திருந்தார்கள். பஞ்சிலிருந்து நூல் நூற்கவும், ஆடை நெய்யவும் அவர்கள் பயின்றிருந்தார்கள். வாணிபம் செய்து தங்களுடைய பொருளை அவர்கள் பெருக்கிக்கொண்டார்கள். அவர்களுடைய வீடுகள் பெரி

1. Alpaca. 2. Ilama.

யனவாயும், அழகு மிகுந்தும் அமைந்திருந்தன. மக்களோவெனில், தம் உள்ளத்தில் கள்ளமென்பதே அறியாதவராயிருந்தனர். அவர்கள் தாங்கள் பகலவன் வழித்தோன்றல்களெனக் கூறிக்கொண்டார்கள். (குமரிக் கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு என்னும் நூலிற் குறிப்பிடப்பட்டுள்ள தென்றமிழ் நாட்டின் பழம் பெருங் குடிகளுடைய ஒரு பிரிவினர்தாம் அவர்கள் என்பதும், உலக வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலேயே அவர்கள் மிகவும் பண்பட்ட வாழ்வு நடாத்தினரென்பதும், கலஞ் சமைத்து வெகு தொலை சென்று பிறநாடு காணும் பேராவல் மிக்க மக்களே அவர்கள் என்பதும் ஆதலால், அம்மக்களே தென் அமெரிக்காவுக்குச் சென்றிருக்கவேண்டும் என்பதும், அவர்களுடைய தாய்நாடு அந்நாளில் [1]இலெமூரியா எனக் குறிப்பிட்டதென்பதும் இக்கால அறிஞர் காணும் முடிவு.) அவர்கள் தாங்கள் [2]இன்கர்கள் இனத்தைச் சேர்ந்த பெருங்குடி மக்களெனக் கூறிக் கொண்டனர். அவர்களுடைய அரசியல் முறை மிகவும் திறமைபெற்றதாயிருந்தது.

## பிஸாரோவின் பேராசை

பெருவியருடைய செல்வத்தையும், விருந்தோம் பல் முறையையும் கண்ட பிஸாரோவின் உள்ளத்தில் உவகையும் துடிப்பும் ஒருங்கே குடிகொண்டன. அம் மக்கள் தமக்களித்த பொருள்களாலும், அவ்வளவு பெருஞ் சிறப்புற்ற நல்வாழ்வு பெற்ற மக்களுடைய ஒரு பெரு நாட்டைக் காணும் பேறு தமக்குக் கிடைத்தது பற்றியும் பிஸாரோ மகிழ்ந்தார். எனினும்

1. Lemuria. 2. Incas.

கள்ளமற்ற அம்மக்களை வெல்லுவது எளிதாதலால், அதற்கு வேண்டிய ஆட்கள் தம்மிடம் இல்லையே என்னும் குறை அவரை நையச் செய்தது. அகத்தில் பகையும், முகத்தில் நகையும் கொண்டு பிஸாரோவும் அவர் கூட்டத்தாரும் பெரு நாட்டாரிடம் விடை பெற்று மீண்டனர். பிஸாரோ பனுமாவுக்குச் சென்று, ஆள்வோரிடம் தாம் கண்டவைகளைப்பற்றிக் கூறினர். ஆளுவோரும் மிக மகிழ்ந்து, ஸ்பெயின் நாட்டு வேந்தரை அணுகிப் பெருவை வெல்லுவதற்கு உதவி வேண்டுமாறு பிஸாரோவுக்குப் பணித்தார்.

### சூறையாடல்

அவ்வாறே பிஸாரோ ஸ்பெயின் நாட்டரசரிடம் சென்று தம்முடன் போர்வீரர் பலரை அனுப்பித் தருமாறு வேண்டினர். ஸ்பெயின் அரசரும் பல கப்பல்களையும், போர்வீரர்களையும் பிஸாரோவுக்கு உதவியாக அனுப்பினர். பிஸாரோ அவர்களனைவரை யும் அழைத்துக்கொண்டு பெருவை அடைந்தார். பெரு வியரை அடிமைகளாகச் செய்தும், அவர்களுடைய செல் வங்களைக் கைப்பற்றியும் ஸ்பெயினுக்குத் திரும்பினர்.

### பிஸாரோவின் தன்மை

பிற நாடுகளைக் காணவேண்டுமென்னும் பேரா வல் மிகுந்தவர் பிஸாரோ; ஆதலால், வழியில் தமக்கு ஏற்பட்ட பேரிடையூறுகளைப் பொருட்படுத்தவில்லை. பொதுவாக உலகத்தவரும், குறிப்பாக ஸ்பெயின் நாட்டினரும், பெருவியா நாட்டை அறிந்துகொண் டது பிஸாரோவின் பெரு முயற்சியினுலேயேயாகும்.

---

## கா. [1]அலெக்ஸாண்டர் வான் ஹம்போல்ட்

### இளமை

அலெக்ஸாண்டர் வான் ஹம்போல்ட் ஒரு செருமானியர். அவர் 1770-ஆம் ஆண்டு [2]பெர்லின் நகரிற் பிறந்தார். நான்கு ஆண்டு நிரம்பப்பெறாத சிறுவராயிருந்த போது அவர் தம்மையொத்த சிறுவர்களுடன் விளையாடுவாராம். மற்றையோர் சிறு படங்களும் கோலிக்குண்டுகளும் வைத்துக்கொண்டு விளையாடினால், அலெக்ஸாண்டர் சிறு நத்தைக் கூடுகளையும், செடி கொடிகளையும், பூச்சிகளையும் வைத்துக்கொண்டு விளையாடுவாராம். தரையிலே ஒரு புதுமையான கூழாங்கல் கிடந்தாலும், அதைத் தம் கையில் எடுத்து வைத்துக்கொண்டு உற்று நோக்குவாராம். பள்ளியிற் கல்வி பயிலும் பருவத்திலும், பள்ளியிலிருந்து வீடு திரும்பியதும், தம்முடைய [3]படிப்பறைக்குச் சென்று, நிலப் படங்களை எடுத்துப் பிரித்து வைத்துக்கொண்டு ஆறுகளையும், மலைகளையும், காடுகளையும், நகரங்களையும்பற்றிய பொருள்களைக் கூர்ந்து ஆராய்வார். அப்போது அவருடைய அன்னையார் அவரை உண்ண அழைப்பினும் அவர் செல்லார். அன்றுடம் அவருடைய [4]நெறியிறைவர் இவருக்கு [5]இலத்தீன் மொழி கற்பிக்க வந்த பின்னர்தான் அவர் தம்முடைய பாடவாராய்ச்சியை விட்டு அவ்வாசிரியரை வணங்குவார்.

### கல்வியில் ஊக்கம்

அவருடைய ஆசிரியர்கள் அவர் பிற்காலத்தில் ஆராய்ச்சித்துறையில் வல்லுநராவாரென்று அறிந்து

1. Alexander Von Humboldt. 2. Berlin. 3. Study Room. 4. Priest. 5. Latin.

கொண்டனர். அவருடைய நண்பர்கள் அவர் ஒரு [1]விலங்கியல் அறிஞராகவோ, மண்ணியல் வல்லுநராகவோ சிறப்படைவாரென்று பேசிக்கொண்டனர். அரசியற் பிரிவைச் சேர்ந்தவர்கள் அலெக்ஸாண்டர் ஒரு சிறந்த அரசியலறிஞராவாரென்று சொல்லிக்கொண்டார்கள். இவ்வாறு பலருடைய நன்மதிப்புக் குரியவராயிருந்த அலெக்ஸாண்டர், தம்முடைய ஊக்கத்திறலும், அறிவு நுட்பத்திறலும், அயர்வின்மையாலும், எல்லோ ரையுமே தம் வயப்படுத்தும் தன்மையைப் பெற்றிருந் தார். தம் பாடங்களில் சொல்லப்பட்ட நிலவாராய்ச்சி யாளரைப் போலத், தாமும் ஒரு சிறந்த அறிஞராக விளங்கவேண்டும் என்று அவர் ஆவல் கொண்டார்.

### அறிஞரை நாடுதல்

அந்நாளில், [3]ஜார்ஜ் பாஸ்டர் என்னும் அறிஞர் உலகைச் சுற்றிப் பயணம் செய்தவர் அலெக்ஸாண் டர் அவருடைய நட்பைப் பெற்றால், தம்முடைய நோக்கம் விரைவில் நிறைவேறும் என்று நினைத்தார். ஆதலால், ஒருநாள், அவர் பாஸ்டரிடம் சென்றார். பாஸ்டரைக் கண்டதும் அலெக்ஸாண்டருக்கு அளவற்ற வியப்பு உண்டாயிற்று. பாஸ்டர் மிக்க பொறுமையும், இரக்கமும், அமைதியும் கூடிய தோற்றமளித்தார். "உலகு சுற்றி வந்திருக்கின்றார் இவர் அயல்நாடு செல் வோர், கண்மூடிக் கண்திறப்பதற்குள் கருத்திற் கெட் டாத செயல்கள் செய்யக்கூடிய வன்மை உடையவர்க ளாகவன்றோ இருத்தல்வேண்டும்? இவ்வளவு மேன்மை யான சீலத்தோடு விளங்கும் இவர் உலகப் பயணத்தி லேற்பட்ட இன்னல்களை எவ்வாறு பொறுத்திருப் பார்?" என்று வியந்தார்.

---

1. Zoologist. 2. Geologist. 3. George Forster.

### அறிஞர் அறிவுரை கூறல்

அவருடைய வியப்பைக் கண்டுகொண்ட பாஸ்டர், "ஆராய்ச்சியாளருக்கும், மண்ணாசைக்காரர்களுக்கும் உள்ள வேற்றுமை தங்களுக்கு விளங்கவில்லை. ஆராய்ச்சியாளருக்கு ஆளையடிக்கும் வலிமை தேவையில்லை, அவர்கள் பதறமாட்டார்கள்; அவர்கள் எதையும் அழிக்கமாட்டார்கள்; அறிவைப் பெருக்கவே ஆராய்ச்சியாளர்கள் உதவவேண்டும்; ஆராய்ச்சியாளர்கள் பெருந்தன்மை உடையவர்களாயிருத்தல் வேண்டும். அவர்களால்தான் நாட்டிற்கு நல்ல பணியாற்ற இயலும்; அன்றி ஒரு நாட்டை ஆராயவேண்டுமென்று சென்று. ஆங்குள்ள பொருள்களைக் கைப்பற்றி வருதல் பெருங் குற்றம்," என்று கூறினார். அறிஞருடைய அறிவுரை அலெக்ஸாண்டருக்குச் செவ்வனே விளங்கவில்லை. 'பிற நாட்டிற் காணப்படும் பொருள்களைக் கொணர்ந்தால்தானே நம் நாட்டாரும் அந்நாட்டைப் பற்றிச் சிறிதேனும் அறிதல் இயலும்?' என்று எண்ணி அவர் மயங்கினார்.

### அறிஞரின் விளக்கம்

அலெக்ஸாண்டருடைய அகநிலையைக் குறிப்பாலுணர்ந்தார் பாஸ்டர். அவருடைய ஐயத்தைப் போக்க நினைத்தார். ஆகவே, "தங்களுக்கு இரு வீரருடைய வரலாறு உரைப்பேன்; உளங் கொள்ளுவீர். இந்நாள் [1]மெக்ஸிகோ எனப்படும் பெருநிலப் பரப்பில் அந்நாளில் [2]'அஸ்டெக்' என்னும் மக்கள் நிறைந்திருந்தனர். அவர்களுடைய கடைகளில் பொன்னும், முத்தும், மணியும், நல்லிறகுகளும் மலிந்து. இருந்தன. [3]ஹெர்னண்டோ கார்ட்டிஸ் என்னும் ஸ்பெயின் நாட்டார்

1. Mexico. 2. Aztecs. 3. Hernando Cortes.

ஒருவருடைய தலைமையில் ஸ்பெயின் நாட்டினர் சிலர் ஆங்குச் சென்றனர். மெக்ஸிகோவைக்காண விரும்பியே தாங்கள் அங்குப் போனதாகக் கூறினார்கள். அஸ்டெக் மக்களும் தம் நாட்டிற்கு விருந்தினராய் வந்த ஸ்பெயின் நாட்டினரை உள்ளன்போடு வரவேற்று, உண்டியும், இருக்கையும் உதவினார்கள்; ஊர்ப்புதுமைகளைக் காட்டினார்கள். பொன்னும் மணியும் மலிந்து வளம் பெற்ற அந்நாட்டைக் கண்ட ஸ்பெயின் நாட்டினர் உள்ளத்தில் பேராசைத்தீ கொழுந்துவிட்டெரிந்தது. ஆதலால், அவர்கள் தங்களுடைய படைவலி கொண்டு கள்ளமற்ற அஸ்டெக்குகளை எளிதாக வென்று, அவர்களுடைய உடைமைகளைக் கொள்ளைகொண்டு சென்றனர். ஆராய்ச்சியாளர் தாம் காணச் செல்லும் நாட்டு மக்களை நலிவுற வாட்டுதல் நலமோ?" என்று அறிஞர் கேட்டார்.

அலெக்ஸாண்டருடைய வேண்டுகோள்

இவ்வரலாற்றைக் கேட்ட அலெக்சாண்டருடைய அகம் கனிந்தது. "பெரும்பொருள்மீது கொண்ட பேராசை காரணமாக மனிதத்தன்மையை இழக்காது, நன்மனவலிகொண்டோனே சிறந்த அறிஞனாவான்; உண்ட வீட்டிற்கு இரண்டகம் நினைப்பதுபோலத் தம்மை வரவேற்கும் மக்களை வாட்டுவோன் ஒரு வீரனாகான். நான் அம்மெக்ஸிகோ நாடு செல்ல அவாவுகின்றேன். தாங்கள் கூறுவதைக் கேட்க எனக்கு மேலும் மேலும் ஊக்கம் மிகுகின்றது! மற்றொரு வீரர் வரலாற்றையும் உரையுங்கள். நீங்கள் கூறுவது எனக்கு நன்கு விளங்குகின்றது," என்று கூறிப் பரிவுடன் அறிஞரை வேண்டினார் அலெக்சாண்டர். அறிஞர் பின்னும் சொல்லத் தொடங்கினார்.

## இன்கர்கள் பேரரசு

"[1] இன்கர்கள் பகலவன் வழித் தோன்றல்களெனத் தங்களைக் கூறிக்கொண்டார்கள். அவர்களுடைய நாடு தற்போது [2] பெரு [3] ஈகுவடார் எனப்படும் நிலப் பரப்புக்கும் அப்பால் விரிந்து விளங்கியது. அவர்கள் உலோக வேலைகளிற் சிறந்தவர்களாகவும், வழி அமைப்போர்களாகவும், ஓவியம் வரைவோர்களாகவும் இருந்தார்கள். சோம்பல் என்பதே அறியாதவர்கள். அதனால், அவர்களுடைய செல்வமும், வாணிபமும் தழைத்தன. அப்போது ஸ்பெயின் நாட்டினர் [4] பிஸாரோ என்பவருடைய தலைமையில் அவர்களுடைய நாடு சென்றனர். உலகிற்கு ஒளிவழங்கும் பகலவன் வழியினர் தம் நாடு வந்துற்ற ஸ்பெயின் நாட்டினரைப் பரிவுடன் வரவேற்று, வேண்டுவன உதவித் தம் நாட்டில் உண்டான அழகு மிகுந்த மட்கலங்களையும், பொற்கட்டிகளையும் காட்டினர். அவற்றைக் கண்ட பிஸாரோ, அப்பொருள்களோடு தம் நாடு செல்ல வேண்டுமென்றெண்ணி இன்கர்களை வென்று வீழ்த்தி, அவர்களுடைய மணியும், முத்தும், துணியும் கொள்ளை கொண்டு மீண்டனர். இது முறையோ? ஆதலாற்றான், உண்மை கண்டு உலகுக்கு உரைப்பவன் அறிஞனேயன்றி, மறவனல்லன் என்று நான் கூறினேன். இப்போது தங்கள் கருத்து என்னவோ?" என்று கேட்டார் அறிஞர்.

## அலெக்ஸாண்டர் கண்ட முடிவு

ஆம்! அறிஞனுக்கு அறிவே கருவி; மறவனுக்குத்தான் வாள் வேண்டும்; அறிஞன் அறிவொளி

1. Incas. 2. Peru. 3. Ecuador. 4. Pizarro.

பரப்புகிருன்; மறவன் குருதி வெள்ளம் காண்கிருன்; நாடு காணுவோன் அறிஞன்; நாடுகொள்ளுவோன் மறவன்; அறிஞனுடைய இலக்கும், மறவனுடைய முயற்சியும் மாறுபட்டு நிற்பதைத் தாங்கள் விளக்கினீர்கள். நான் இப்போது அந்நாடுகளுக்குச் செல்ல விரும்புகின்றேன்,'' என்று அலெக்ஸாண்டர் கூறிப் பாஸ்டரைப் பணிந்து மீண்டார்.

## அலெக்ஸாண்டர் பயணம்

தென்அமெரிக்காவுக்குச் சென்று ஒரினுகோ ஆற்றினுடைய போக்கைக் கண்டு ஆராயவும், எவராலும் அடையக்கூடாமலிருந்த சிம்பரசோ உச்சியை அடையவும் அவர் திட்டம் வகுத்தார். அதன்படி 1799-இல் பிஸாரோ வென்னும் கலத்தில் தமக்கு வேண்டிய பொருள்களை எடுத்துக்கொண்டு, தென் அமெரிக்கா சென்று, ஓரினுகோ ஆற்றின் வழியே ஒரு சிறு படகில் சென்ருர். உள்நாட்டுமக்கள் இருவரைத் தமக்கு வழி காட்டிகளாகக் கொண்டார்.

## காட்டில் அலெக்ஸாண்டர் வாழ்க்கை

ஒருநாள் மாலைப்போது வந்ததும், அலெக்ஸாண்டரும், அவருடைய துணைவரும், வழிகாட்டிகளும், அவர்கள் போய்க்கொண்டிருந்த காட்டின் ஒரு பிரிவில் படகைவிட்டிறங்கினுர்கள். தாங்கள் தங்குவதற்காக ஒரு கூடாரம் அமைத்துக்கொண்டார்கள். இரவில், அவர்களுக்கு உறக்கம் வரவில்லை. அன்று முழுமதி ஒளி பரப்பிக்கொண்டிருந்தது. காட்டுப் பறவைகள் மனமகிழ்வோடு பாடிக்கொண்டிருந்தன. சில பறவைகளைப்பற்றித் தமக்குத் தெரியாதவற்றை அலெக்ஸாண்

டார், தம் வழிகாட்டிகளைக் கேட்டுத் தெரிந்துகொண் டார். பொழுது புலர்ந்ததும், சில அழகான பறவை களைப் பிடித்துக்கொண்டுவரச்சொல்லி தம் படகில் ஒரு கூட்டில் வைத்துக்கொண்டார். அதுபோலவே, நல்ல மணந்தரும் மலர்களையுடைய செடிகளையும், மரமாகிச் சுவையுள்ள பழந்தரவல்ல இளஞ் செடிகளையும் தரு வித்துத் தமது படகில் வைத்துக்கொண்டார்.

## வழிகாட்டுவோர் வியப்பு

அலெக்ஸாண்டருடைய வழிகாட்டிகளுக்கு அவ ருடைய செய்கைகளின் நோக்கம் விளங்கவில்லை; உண்பதற்குப் பயன்படாத பறவைகளையும், சிறு செடி களையும் கொண்டுவரச் சொன்னதின் காரணம் அவர் களுக்குப் புரியவில்லை. அவற்றைத் தமது படகில் வைத்துப் பாதுகாப்பதன் நோக்கம் அவர்களுக்குப் புலனாகவில்லை.

"ஒருவேளை இவ்வாறெல்லாஞ் செய்தால் படகு பாறைகளில் மோதாமல் செல்லுமோ? அப்படியும் தோன்றவில்லையே? இவர்கள் என்னதான் முயன்ற போதிலும் படகைக் காப்பாற்ற முடியவில்லையே! நாமல்லவோ படகை மோதாமல் கரை சேர்க்கிறோம்! இவர்கள் தங்கள் படகுகளுக்குக் கண்கள் அமைக்க வில்லை. கண்கள் அமைக்காததால்தான் காட்டுக் கடவுள் இவர்களுடைய படகை அடிக்கடி பாறையில் மோதும் படி செய்கிறது! படகுகளுக்குக் கண் அமைப்பது எவ்வளவு எளிது. அதைவிட்டு இவர்கள் வேறு என் னென்னவோ செய்கின்றார்களே!

"ஒருவேளை இவர்களுக்கு மதிமயக்கம் உண்டாகி யிருக்குமோ! ஆம்! அப்படித்தான் இருத்தல் கூடும்.

ஆதலால்தான் தம்மூரைவிட்டு இங்கே வந்து அலைந்து திரிந்து அல்லற்படுகிறார்கள்! ஒரு சிறிய பறவையைப் பிடித்துக்கொண்டுவந்து கொடுத்தவுடன் நம்மிடம் ஒளி வீசும் பொற் காசுகளை நிறைய அள்ளிக் கொடுக்கின்றார்கள். அவற்றைப் பயன்படுத்தும் முறை அவர்களுக்குத் தெரியவில்லை! இப் பொற்காசுகளைச் சேர்த்துக் கோத்து அவர்களுடைய பறவைக்கூட்டில் கட்டினால், அது எவ்வளவு அழகாயிருக்கும்!

"ஒருவேளை இவர்களுடைய கிறுக்கு முற்றியதும், நம்மையும் இவர்கள் பிடித்துக் கடித்துக் கழுத்தை முறித்துவிடுவார்கள் போலும்! அதற்குள் நாம் இவர்களறியாமல் ஓடிப்போகவேண்டும். அதுவரையில் நாம் இவர்களிடமிருந்து பெறும் பொற்காசுகள் அனைத்தையும் ஒரு கோவையாக்கி நம் குடிசையில் கட்டித் தொங்கவிட்டால் அது எவ்வளவோ அழகுடன் விளங்கும்! ஏன்! நாம் அவற்றை வருந்தி வழிபட்டால் அவை இரவில்கூட ஒளியுடன் மிளிரக் கூடுமல்லவா? அவை நாளடைவில் நம்மிடம் அன்புகொண்டு நம்மோடு பேசவுங்கூடும்!"

இவ்வாறு, அவ் வழிகாட்டிகள் வியப்புடன் பேசிக்கொண்டனர். உலகமெங்கும் தம் நாட்டிலுள்ளவை போன்றே பறவைகளும், விலங்குகளும் இருக்கக்கூடும் என்று அவர்கள் உறுதிகொண்டிருந்தனர். ஆதலால், அலெக்ஸாண்டர் அப் பறவைகளை அவ்வளவு பிரியமாகக் காப்பாற்றியதன் நோக்கம் அவர்களுக்கு விளங்கவில்லை.

### சிம்பரஸோ உச்சி

அலெக்ஸாண்டர் ஓரிடத்தில் ஓரிஞோகோ ஆறு இரு பிரிவுகளாகப் பிரிவதைக் கண்ணுற்றார். பிறகு,

அவரும், அவருடைய துணைவரும் சிம்பரஸோ மலை யுச்சியைக் காண விரும்பினார்கள். அம்மலைக்குத் தங்களை அழைத்துச் செல்லும்படி தங்களுடைய வழிகாட்டு வோரைப் பணித்தனர். அவர்களும் அவ்வாறே அவர் களை அம்மலைக்கு அழைத்துச் சென்றனர். பிறகு அவர்கள் மலைமீது ஏறத்தொடங்கியதும், வழிகாட்டி கள் வேண்டா வெறுப்புடன் அவர்களை அழைத்துச் சென்றனர். மேற் செல்லச்செல்ல வழிகாட்டிகளுக்குச் சலிப்பு மிகுந்தது. பதினாயிரம் அடி உயரத்திலிருந்த ஓர் இடத்திற்குச் செல்லும் வரையில் அவர்கள் தங்க ளுடைய வருத்தத்தைப் பொறுத்துக்கொண்டனர்.

வழிகாட்டிகள் பிரிதல்

மலை வானை அளாவி நின்றதைப் பார்த்தபோது, அவர்களுக்கு அச்சமும், வியப்பும் ஏற்பட்டன. எங் கணும் பனிப்படலம் பரவியிருந்ததால், மேற்செல்லும் வழி ஒன்றும் புலனாகவில்லை. ஒருவேளை அம்மலை உச்சியில்தான் அக்காட்டின் கடவுள் எவருமறியாமல் உறையக்கூடும் என அவர்கள் நினைத்திருக்கலாம். ஆகையால், அவர்களுடைய அச்சம் பெருகியிருக்கவுங் கூடும். அதன்மேல் அவர்களால் மேற்செல்ல முடியா தென்று மறுத்தனர். மலை உச்சியைக் கண்டால் நல்ல புகழ் உண்டாகும் என்று அலெக்ஸாண்டர் கூறவே, அவர்களுக்கு அச்சத்துடன் ஐயுறவும் மிகுந்தது. மலை யுச்சியில் இருக்கும் கடவுளுக்குத் தங்களைப் பலியிடவே அவர்கள் தங்களுக்குப் பொற்காசுகளைக் கொடுத்து, ஆசை காட்டி அழைத்துச் செல்கின்றார்களென அவர் கள் அஞ்சினர். உடனே அவர்கள் தங்களால் ஒரு அடி கூட மேலேற முடியாதென்று மறுத்துக் கீழ்நோக்கிச் சென்றுவிட்டார்கள்.

### உச்சி காணல்

பிறகு, அலெக்ஸாண்டரும், அவருடைய நண்பரும் மிகுந்த தொல்லையோடு மேற்சென்றார்கள். இறுதியில் அவர்கள் தரைமட்டத்திற்குமேலே 19,200—அடி உயர்ந்திருந்த சிம்பரஸோ உச்சியை அடைந்தார்கள். கீழே பாழடைந்த சின்னஞ்சிறு பாலங்களும், வீடுகளும், வழிகளும் இன்கர்கள் பேரரசின் நினைவுக் குறியாக விளங்கின. அவற்றைப் பார்த்த அலெக்ஸாண்டர் மிகவும் துயரடைந்தார். தாம் ஆங்காங்குக் கண்ட உண்மைகளை அவ்வப்போது குறித்துக்கொண்டார். பிறகு மெக்ஸிகோவுக்குச் செல்லும் உறுதியுடன் கீழே இறங்கினார்.

### மெக்ஸிகோவில் அலெக்ஸாண்டர் ஹம்போல்ட்

பிறகு, அலெக்ஸாண்டர் மெக்ஸிகோவுக்குச் சென்றார். அங்கே அஸ்டெக்குகளின் அழிந்துபோன பேரரசின் அடையாளங்களைக் கண்டார். ஸ்பெயின் நாட்டினருடைய பொன்னாசையாலேயே அப்பேரரசு அழிந்தது என்று நினைத்தபோது, அவருக்கு மிகுந்த வருத்தம் ஏற்பட்டது. பிறகு, தமக்கு அந்நாட்டு வரலாற்றைக் கூறிய அறிஞர் பாஸ்டரையும், தம் நண்பர்களையும் கண்டு தம்முடைய பயணத்தைப்பற்றிக் கூற வேண்டுமென்று மிகவும் விரும்பினார்.

### நாடு மீளல்

ஆதலால், அலெக்ஸாண்டர் 1804-ஆம் ஆண்டில் தம் நாடு திரும்பினார். தம்முடன் ஒன்பது அறிஞர்களைச் சேர்த்துக்கொண்டு தாம் தம்முடைய பயணத்திற் கண்டறிந்த உண்மைகளை ஒரு நூலாக வெளியிட்

டார். அவர் [1]கனிகளில் கேடு ஏற்படாமல் எரியக் கூடிய விளக்குகளைக் கண்டுபிடித்தார். நிலப்படங் களில் [2]வெப்பதட்பக்கோடுகளை முதன்முதலாக வரைந் தவர் அலெக்ஸாண்டர் ஹம்போல்ட் ஆவார். அவர் 1859-ஆம் ஆண்டில் இறந்தார். அறிஞர் பலரும் அலெக்ஸாண்டரை மிகவும் புகழ்வார்கள்.

---

1. Mines. 2. Isotherms.

## எ. ஹாரி டி விண்ட்ட்

[1]ஹாரி டி விண்ட்ட் என்பவர் [2]பிரான்சு நாட்டினர். அவர் பல இடங்களிலும் பயணஞ் செய்தவர். உலகெங்கும் சுற்றிப் பண்பட்டவர். அவர் 1902-ஆம் ஆண்டில் தம் நாட்டின் தலைநகராகிய [3]பாரிஸிலிருந்து [4]அமெரிக்காவின் முதன்மையான கப்பற்றுறை நகராகிய [5]நியூயார்க்குக்குத் தரைவழியே 19,000-கல் தொலை நீண்டதொரு பயணம் போனார்.

### மாஸ்கோ

1901-ஆம் ஆண்டு டிசம்பர் 19-ஆம் நாள் பாரிஸ் நகர்விட்டு அவர் புறப்பட்டார். மூன்று நாட்கள் பயணஞ்செய்து 1,800-கல் தொலை கடந்து [6]மாஸ்கோ வந்து சேர்ந்தார். மாஸ்கோவில் அப்போது குளிர்காலம். ஆதலால், டி விண்ட்ட் மிகவும் வருத்தத்துடனே அங்குத் தங்கியிருக்க நேர்ந்தது. மறுபடியும் அவர் தம்முடைய பயணத்தைத் தொடங்கப் பதினைந்து நாட்கள் ஆயின.

### இர்கட்ஸ்க்

ஜனவரி 4-ஆம் நாள் மிக மகிழ்வுடன் குளிர் நிறைந்த மாஸ்கோவைவிட்டு டி விண்ட்ட்டும் அவருடைய தோழர்களும் புறப்பட்டார்கள். அங்கிருந்து கீழ்த்திசையில் 4,000 கல் தொலை [7]பைகல் ஏரியின் தென் கரையோரமாய் இருக்கும் [8]இர்கட்ஸ்க் என்னும் ஊருக்குச் செல்ல [9]குறுக்கு சைபீரிய இருப்புப்பாதையில் ஒரு ரயிலில் ஏறினார்கள். அந்த ரயிலில் ஒன்பது நாட்கள்

1. Harry de Windt. 2. France. 3. Paris. 4. America. 5. New York. 6. Moscow. 7. Baikal. 8. Irkutsk. 9. Trans-Siberian Railway.

பயணஞ்செய்தனர். சில சமயம் அவர்களுடைய ரயில் அடர்ந்த தேவதாரு மரக்காடுகளினடுவே சென்றது. அவர்கள் சென்ற வழியில், இரு புறங்களிலும் கண்ணுக் கெட்டிய தொலை வரையில், வானளாவிய பனிக்கட்டி களே உறைந்து இருந்தன. எங்குப்பார்த்தாலும் ஒரே வெள்ளைப்பனி! வழியில் [1]யூரல் மலைகளையும், ஆறு களையும் கடந்தார்கள். அவற்றைத் தாண்டி மேல் சைபீரியாவுக்கு வந்தார்கள். அங்கே தரை முழுதும் பனி படிந்து இருந்தமையால், ரயில் வண்டி மணிக்கு 20-கல் தொலையே சென்றது. பலநாட்களில் கதிரவன் பளிச்சென்று காய்வதுண்டு. அப்போது நடுப்பகலில் ரயில்வண்டிக்குள் வெப்பம் மிகுந்தும், வெளியில் குளிர் தாங்கமுடியாதபடி மிகுந்தும் இருக்கும்.

இவ்வாறு பயணஞ்செய்து ஜனவரி 13-ஆம் நாள் இர்கட்ஸ்க் வந்து சேர்ந்தார்கள். அங்கே மூடியில்லாத ஒருவகை வண்டியில் அவர்கள் ஏறிச் சுற்றினார்கள். அப்போது அங்கே, குளிர் மிகுந்த பனிப்புயல் ஒன்று தொடங்கியது. அப்போதுதான் தங்கள் பயணத்தின் வருத்த மிகுந்த பகுதி தொடங்கியது என்று அவர்கள் உணர்ந்தார்கள்.

இர்கட்ஸ்க் நகரில் அவர்கள் ஐந்து நாள் தங்க நேர்ந்தது. அந்நகரில் அப்போது, ஆசியா கண்டத்தின் எல்லாப் பகுதிகளிலுமிருந்து வந்து குடியேறியிருந்த பதினெண்ணாயிரம் மக்கள் இருந்தனர். அவ்வூரில் விண்டட்டுக்கும், அவர் துணைவர்களுக்கும் உண்ண வும், உறங்கவும் வசதிகள் இல்லை. அவ்வூரில் வாழ்க்கை நலங்கள் எதுவும் இல்லை. அக்காலத்தில் அங்கே கொலையும் களவும் மலிந்திருந்தன.

1. Ural.

இர்கட்ஸ்க் முதல் யாகட்ஸ்க் வரை

ஆதலால், ஜனவரி 19-ஆம் நாள் டி விண்ட்டும் அவருடைய துணைவர்களும் [1]யாகட்ஸ்க் நகர் நோக்கிப் புறப்பட்டார்கள். அந்நகர் அங்கிருந்து இரண்டாயிரம் கல் தொலைவிலிருந்தது. அப்பயணத்தில் அவர்கள் ஏறிச் சென்ற [2]பனிந்தரை வண்டிகளில் வசதிகள் குறைந்திருந்தன.

[3]இர்கட்ஸ்க் முதல் [4]லேனு ஆற்றின் தலைப்பு வரையில் அவர்கள் 150-கல் தொலை அடர்ந்த தேவதாரு மரக் காட்டின்வழியே செல்லவேண்டியிருந்தது. அதையடுத்து அவர்கள், நீர் பனியாக உறைந்த ஆற்றின் வழியே செல்லவேண்டியதாயிற்று. அவ்வழியில் தடம் குறிக்க ஆங்காங்குத் தேவதாரு மரக்கிளைகள் புதைக்கப்பட்டிருந்தன. அவ்வழியில் அவ்வாறான அடையாளம் கட்டாயம் வேண்டியதாயிற்று. ஏனெனில், அங்கே உறைபனியின் கீழ் சிற்சில இடங்களில் [5]கொதிநீர் ஊற்றுகள் இருந்தபடியால், பனிக்கட்டி உருகியிருக்கும். அவ்விடங்களில் மக்கள் சென்றால் பனியின்கீழ் அழுந்த நேரிடும். அக்காலத்தில் கொடுங் குளிராயிருந்ததால், அவ்விடங்களில் அவர்கள் சுருட்டுக்கூட பிடித்தல் இயலாது. சுருட்டை வாயில் வைத்தால் அதில் பனி உறைந்து அதை வாயில் புதைத்துவிடும் ஒரு சமயம் பயணஞ் செய்பவர்களுள் ஒருவர் [6]புகைப்பட மெடுக்கத் தம் கை உறையைக் கழற்றிப் [7]புகைப்படக் கருவியின் உலோகப் பகுதியொன்றை நகர்த்தினர். என்ன விந்தை! அவர் கைவிரல்களில் பழுக்கக் காய்ந்த இரும்பைத்

---

1. Yakutsk. 2. Sleighs. 3. Irkutsk. 4. The Lena.
5. Hot Springs. 6. Photo. 7. Camera.

தொட்டதுபோல் கொப்பளித்தன. உறைக்குள் இருந்த கைவிரல்களின் வெப்பத்துக்கும், வெளியில் இருந்த புகைப்படக் கருவியின் கொடுங் குளிருக்கும் பொருத்த மில்லை. அவர்களுடைய பயணத்துக்குவேண்டிய பால் கட்டி கட்டியாக உறைந்துபோயிற்று. அக்கட்டிகளைப் பைகளில் போட்டு வண்டிகளின் வெளிப்புறத்தில் தொங்கவிட்டிருந்தார்கள். அவ்வளவு குளிர்!

அவ்வழியில், பதினைந்து முதல் முப்பது கல் தொலைக்கு ஒரு [1]குதிரை மாற்றுமிடம் இருந்தது. ஒவ்வொரு குதிரை மாற்றுமிடத்திலும் மூன்று புதிய குதிரைகளைப் பெற்றுத் தங்கள் பயணத்தை மிக விரைவாக நடத்தினார்கள். [2]இர்கட்ஸ்க் முதல் [3]யாகட்ஸ்க் வரையில் நாள் ஒன்றுக்கு நூற்றுமுப்பது கல் பயணஞ் செய்தார்கள். அவர்களுடைய வழியின் நிலையையும், அங்கங்கே அவர்களுக்குற்ற இடர்களையும் நோக்க, அது மிக மிகுந்த விரைவான பயணம் என்று சொல்லலாம். சிற்சில இடங்களில் பனிக்கட்டியால் வழி முற்றிலும் அடைபட்டு, வழிப்பயணம் போகமுடியாதபடி இருக்கும்; அடிக்கடி அவர்களுடைய பயண வண்டிகளுள் ஒன்றிரண்டு பனிமிதப்புகளில் புதைந்து விடுவதுண்டு. அவற்றைத் தோண்டி எடுப்பதில் வீண்காலம் போகும். இவ்விடர்களைத் தவிர எதிர் பாராதவிதமாகப் [4]பனிப் புயல்கள் திடீரென்று வீசும். அப்போது அவர்கள் ஒருவரோடு ஒருவர் நெருங்கிக் குதிரைக்கும் வண்டிக்குமிடையில் பதுங்க நேரிடும். அவ்வழியில் இருந்த தங்குமிடங்கள் மிக மோசமானவையே! இரவு நேரங்களில் அவர்கள் உறங்குவதற்கு வேண்டிய வசதிகள் அங்கு இல்லை. தங்குமிடங்

1. Post-horse. 2. Irkutsk. 3. Yakutsk. 4. Blizzard.

களில் இரவைக் கழிப்பதைவிட, அவர்களுடைய பனித்தரை வண்டிகளில் பயணம் போவதே அவர்களுக்கு மிகுந்த நலமாயிருந்தது.

சிறிது சிறிதாக அவர்கள் போகவேண்டிய தொலை குறைந்துகொண்டே வந்தது. வழியில் அங்குமிங்கும் வழிப்போக்கர் சிலரும் தென்பட்டார்கள். ஆனால், எவரும் அவர்களுக்குத் தெரிந்தவர்களல்லர். உலகின் வடகோடிப் பகுதியில் பயணஞ் செய்யும் அவர்களுக்கு அங்கே தெரிந்தவர்கள் எவ்வாறு இருப்பார்கள்? இருந்தாலும் [1]விட்டிம்ஸ்க் என்னும் இடத்தில் ஒரு விடுதியில், உடல் முழுதும் [2]பர் உடையணிந்த ஓர் உருவத்தினர் விண்ட்ட் இடம் ஓடி "நீங்கள் ஹாரி டி விண்ட்ட் அன்றோ?" என்று கேட்டார். விண்ட்டுக்குத் தூக்கி வாரிப்போட்டது. குளிர்நில உடையணிந்திருந்த அவர் இன்னாரென உருவ அடையாளம் தெரியாவிடினும், குரல் அடையாளம் தெரிந்து விண்ட்ட் அவரோடு கை குலுக்கினார். என்னே மகிழ்ச்சி! தாய்நாட்டிலிருந்து நெடுந்தொலையில் அவதி நிறைந்த பயண வழியில் நண்பர் ஒருவரைக் காணல் அரிதினும் அரிதன்றோ?

## டால்போட் க்ளிப்ட்டன்

புதிதாக வந்தவர் [3]டால்போட் க்ளிப்ட்டன் என்பவர். அவர் சிலகாலம் வடகோடியில் ஆங்கிருந்த மக்களுடன் தங்கியிருந்து, தாய் நாட்டுக்குத் திரும்பிப் போய்க்கொண்டிருந்தார். அவர் தாம் கடந்துவந்த வழியின் நிலைமையையும், இடங்களின் தன்மையையும் விண்ட்டுக்குக் கூறினார். அவர் வந்த வழியில்

1. Vittimsk. 2. Fur. 3. Talbot Clifton.

கலைமான்கள் கிடைப்பது அரிதாயிருந்தது. மலைப் பாதைகளில் பனி இறுகி மூடிக்கொண்டிருந்தது. அவரே மிகுந்த வருத்தத்துடன் தொல்லைப்பட்டுத்தான் யாகட்ஸ்க்கிலிருந்து தெற்கே வர முடிந்தது.

### டாக்டர் ஹெர்ஸ்

அச்செய்திகளைக் கேட்டு டி விண்ட்ட் வருத்த முற்றாராயினும், திரும்புவதாக அவருக்கு நோக்க மில்லை. பின்னுஞ் சில நாட்கள் கழித்து [1]டாக்டர் ஹெர்ஸ் என்பவரை அவர்கள் கண்டார்கள். அவர் அப்போது [2]இனம் அற்றுப்போன பழங்கால நீர் யானை இன விலங்கு ஒன்று வடகோடிக் குளிரில் பதம்பட்டுக் கிடந்ததை இருபது பனித்தரைவண்டிகளில் ஏற்றிக் கொண்டு இர்கட்ஸ்க் வழியாக ஐரோப்பாவுக்கு விரைந்து செல்லும் நோக்கத்துடன் வந்துகொண் டிருந்தார். ஆனால், அந்த நீர்யானையை [3]ஸெயிண்ட் பீட்டர்ஸ்பர்க் [4]அறிவியல் கழகப்பொருள் நிலையத்தில் அவர் சேர்த்துவிடவேண்டியதாயிற்று.

### யாகடஸ்க்

அவ்வாறு பயணஞ் செய்துகொண்டு பிப்ரவரி 14-ஆம் நாள் யாகட்ஸ்க் என்னும் இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். அவ்வூரைச் சைபீரிய நாகரிகத்தின் வட கோடி எல்லை எனக் கூறலாம். சைபீரிய மக்கள் [5]உலகின் வரம்பு என அவ்வூரை அழைப்பார்கள். அவ் வூரில் டி விண்ட்டும், அவர் நண்பர்களும் தங்கியிருந்த பொழுது, அவ்வூர் ஊர்க்காவல் தலைவருடைய விருந்

1. Dr. Herz. 2. Mam-moth. 3. St. Petersburgh.
4. Imperial Academy of Science.
5. The End of the World.

தினர்களாக இருந்தார்கள். அத்தலைவர் வேடிக்கை யானவர். அவருடைய நண்பர்களுள் ஒருவர் ஓர் அரசியல் குற்றவாளி! அவ்வூரில் டி விண்ட்ட்டுக்குத் தங்கப் பிடிக்கவில்லை. நீர் நிறை வெப்பம், தூசிப்புயல், கொசுக்கூட்டங்கள் முதலியன அவர்களுக்கு வெறுப்பை யும், தொல்லையையும் விளைவித்தன.

யாகட்ஸ்க் முதல் வெர்க்யோயான்ஸ் வரை

பிப்ரவரி 21-ஆம் நாள் யாகட்ஸ்க் ஊரைவிட்டு அவர்கள் புறப்பட்டார்கள். அப்பயணத்தில் அவர்கள் கலைமான்கள் பூட்டிய வண்டிகளிற் சென்றார்கள். அவர்கள் புறப்பட்டபொழுது யாகட்ஸ்க் ஊர்காவல் தலைவரும், மற்றையோரும் டி விண்ட்ட்டையும், அவ ருடைய நண்பர்களையும் மேற்செல்ல வேண்டாமெனத் தடுத்தும், அவர்கள் கேட்கவில்லை. இதனால் அவர்கள் டி விண்ட்ட்டைக் குறித்து, 'அவர் ஒரு வீரர்—ஆனால், அவர் மரிக்கவே போகின்றார்.' என்று பேசிக்கொண் டார்கள்.

யாகட்ஸ்க் விட்டுப் புறப்பட்ட ஒன்பது நாட்கள் கழித்து, [1]வெர்க்யோயான்ஸ் என்னும் ஊருக்கு அவர்கள் வந்தார்கள். அது மட்குடிசைகள் நிறைந்த ஒரு சிற்றூர். அங்கே [2]யாகூட்களும், [3]ருஷ்யர்களும், [4]நாடு கடத்தப்பெற்ற அரசியல் குற்றவாளிகளுமாக ஐந்நூறு மக்களே இருந்தார்கள். அவ்வூரிலும் ஊர்காவல் தலைவர் டி விண்ட்ட் கூட்டத்தாரிடம் அன்பு பாராட்டி னார். அவர் யாகட்ஸ்க் ஊர்காவல் தலைவரைப் போலவே, தம் காவலில் இருந்த குற்றவாளிகளுடன்

1. Verkhoyansk. 2. Yakutes. 3. Russians.
4. Political Exiles.

மிகவும் நன்றாக ஒரு தோழரைப்போலப் பழகினார். டி விண்ட்டுக்கு அவர் அளித்த விருந்துக்கு அவர் களிற் பலர் வந்திருந்தனர். அவ்விருந்தில் அவ்விடத் துக்கு அரியவையான மிகச் சிறந்த உணவுப்பொருள் களைப் பரிமாறினார்கள். மீன், வறுத்த மான்இறைச்சி, ஏட்டுப் பாற் பனிக்கட்டி, உயர்ந்த சாராயம்—முதலியன உட்கொண்டார்கள்.

## வெர்க்யோயான்ஸ்

வெர்க்யோயான்ஸ் என்னும் அவ்வூரில் இருந்த நாடு கடத்தப்பெற்றவர்களுடைய வாழ்க்கை துயர் நிறைந் தது. மிகக்கொடிய குற்றம் புரிந்தோர்க்கும் அவ் வாழ்க்கையே கடுமையானதொரு தண்டனையாயிற்று. உலகவாழ்க்கையிலிருந்து அவர்கள் பிரிக்கப்பட்டிருந் தனர் அவ்வூரிலிருந்து தப்பிச்செல்லும் வழி இல்லை. நெடுந்தொலையில் உள்ள அவர்களுடைய நண்பர்கள், உறவினர்களிடமிருந்து செய்தி ஏதாவது எப்போ தாவது கிட்டலாம். ஆனால், அவ்வூர் வாழ்க்கை அவர் களுக்குப் பைத்தியம்பிடிக்க வைத்துவிடும். [1]ஓய்வு நேர வேலை ஏதாவது இருந்தால் நாடு கடத்தப்பட்டவர் கள் தங்கள் இன்னல்களை ஓரளவு மறக்கலாம். புத்தகங் கள், திங்கள் இதழ்கள், செய்தித்தாள்கள், வேறு வெளி யீடுகள் முதலியன அங்கே கிடைப்பது அரிதினும் அரிது. டி விண்ட் இளைஞனாயிருந்த ஒரு குற்ற வாளிக்கு ஒரு புத்தகத்தைக் கொடுத்தார். அவன் அங்குத் தண்டனையாக இன்னும் பன்னீராண்டு இருந்து தீரவேண்டியவன். அவன் அப்புத்தகத்தை நீர் நிறைந்த கண்களுடனும், நன்றியறிவுடனும் பெற்று, "நான் இப்

1. Hobby.

புத்தகத்தை அப்படியே மனப்பாடம் பண்ணிவிடுவேன்,'' என்றான்.

வேர்க்யோயான்ஸ் முதல் சிரேத்னி கோலிம்ஸ்க் வரை

அவ்வூராரும் யாகட்ஸ்க் ஊராரைப்போலவே தம் முயற்சியைக் கைவிட்டுத் திரும்புமாறு டி விண்ட்ட்டை வேண்டினார்கள். ஆனால், அவர் அவர்களுடைய வேண்டுகோளை மீறி, வட கிழக்கில் 1000-கல் தொலைக் கப்பாலுள்ள [1]சிரேத்னி கோலிம்ஸ்க் என்னும் ஊரை நோக்கிப் பயணமானார். அங்கிருந்த வண்டிகளும் மிகவும் மோசமானவை. அவ்வழியில் 200-கல்லுக்கு ஒரு தங்கு விடுதியிருந்தது. அவ்விடுதிகள் பெரிதும் பாழ்பட்டுக்கிடந்தன.

[2]வெர்க்யோயான்ஸ்க்கிலிருந்து வடகிழக்கே சிறிது தொலையிலேயே மிகக் கொடிய கடுங்குளிர் ஏற்பட்டது. அவர்கள் வெளிவிட்ட மூச்சில் இருந்த ஈரமும் மூச்சு வெளிவந்ததும் பனிக்கட்டிச் சிதர்களாக உறைந்து கீழே விழுந்தது. நற்காலமாக அங்குக் காற்று வீசவில்லை. காற்றுமட்டும் அடித்திருந்தால் அவர்கள் அங்கே புதைபட்டு மடிந்திருக்கவேண்டும்.

சிரேத்னி கோலிம்ஸ்க்கை நெருங்க நெருங்கத் தரைநிலை கேடு மிகுந்ததாயிருந்தது. பயிர்பச்சைகள் எதுவும் இல்லை. கலைமான்களுக்கு உணவாய்ப் பாசிகள்கூட அங்கே கிடைப்பதில்லை. ஆதலால், கலைமான்களுக்குப் பதில் யாகூட் குதிரைகளை வண்டிகளுக்குத் தேடிக் கொண்டார்கள். அக்குதிரைகள் வெறிமிகுந்து அடங்காதவையா யிருந்தாலும், அக்கடுமையான குளிர் வெளியில், தளர்ச்சியின்றிப் பயணஞ்செய்து [3]கோலிமா ஆற்றங்

1. Sredni Kolymsk. 2. Verkhoyansk. 3. River Kolyma.

கரையில் ஓதுக்கு ஊராயிருந்த சிரேத்னி கோலிம்ஸ்க் என்னும் இடத்துக்கு மார்ச்சு 17-ஆம் நாள் அவர்கள் வந்துசேர உதவியாயிருந்தன.

### சிரேத்னி கோலிம்ஸ்க்

அவ்வூரில் நாற்பது ஐம்பது மண்குடில்களும், ஒரு மர மாதாகோவிலும் இருந்தன அவ்வூர் ஒரு கல்லறை போலச் சந்தடியற்றிருந்தது. அவ்வூர்த் தலைவர் அவர்களை மேற்செல்லவிட மறுத்தார். மேற்பயணத்துக்கு வேண்டிய நாய்கள் கிடைக்கவில்லை ; உணவுப்பொருள்களும் அகப்படவில்லை. நாய்களின்றிப் பயணஞ்செய்ய முடியாது. டி விண்ட்ட் மனந்தடுமாறிப்போனார். ஆனால், டி விண்ட்டுக்குத் தாம் எதிர்பாராத இடத்திலிருந்து உதவி கிடைத்தது. அவர்களுடைய வழிகாட்டிகளுள் ஒருவன் எவருமறியாமற் காணமற் போயிருந்தான். மூன்றுநாட் கழித்து, அவன் தன் நண்பர்களுள் ஒருவனிடமிருந்து அறுபத்துநான்கு நாய்களை வாங்கிக் கொண்டு வந்தான். மிகுதியான விலைகொடுத்துச் சில உணவுப்பண்டங்களையும் வாங்கிக்கொண்டார்கள். மார்ச்சு 22-ஆம் நாள் கோலிமா ஆற்றின் வழியே கடற்கரை நோக்கி அவர்கள் பயணமானார்கள்.

### நிஜ்னி-கோலிம்ஸ்க் வரை

300-கல் தொலையில் இருந்த [1]நிஜ்னி கோலிம்ஸ்க் என்னும் ஊருக்கு வந்தார்கள். அதுவும் ஒரு பாழும் ஊரே. அவ்வூரில் அவர்களுடைய வண்டிக்காரர்களுள் ஒருவன் கலகம் விளைத்து மேற்செல்ல மறுத்ததனாற் பதினான்கு நாட்கள் வீணே கழிந்தன. அப்போது, அவர்களுக்கு ஒவ்வொரு விநாடியும் மிகவும்

1. Njjni-Kolymsk.

அருமையானதாயிருந்தது. அப்போது, மார்ச்சு இறுதி. பனி கரையத் தொடங்குமுன் [1]பேரிங் நீர்ச் சேர்ந்திக்கு அவர்கள் போய்த் தீரவேண்டும். கோடையில் பனி கரையத் தொடங்கினால் அவர்கள் போவது மிகவும் தொல்லை. [2]வோட்கா என்னும் குடிப்பொருளை நிறையக் கொடுத்து அந்த வண்டிக்காரனை வழிக்குக் கொண்டு வந்தார்கள். ஏப்ரல் முதல் வாரத்தில் அவர்கள் கடற் கரை நோக்கிப் பயணம் புறப்பட்டார்கள்.

நிஜ்னி-கோலிம்ஸ்க் முதல் வடமுனை வரை

அந்நிலையில் அவர்கள் நாகரிக வாழ்க்கை நடக்கும் இடங்களுக்கு வெகுதொலையில் போய்க்கொண்டிருந்தார்கள். அவ்வழியில் தங்குவிடுதிகள் இல்லை; உணவு விடுதிகள் இல்லை. தடம் குறிக்கத் தேவதாரு முளைகள் இல்லை பனி உறை கடலருகில் இயற்கையின் சேட்டைகளுக்கு இரையாக அவர்கள் பயணஞ் செய்தார்கள். பனிப் புயல்களும், சருக்கல் தரையும் அவர்களுடைய பயணத்துக்குப் பேரிடர்களாயிருந்தன. உணவுப் பொருள்கள் குறைந்துகொண்டே வந்தன. பனி மிதப்புகளில் வந்த சுள்ளிகளே அவர்களுடைய விறகு. வட கடற்புயல்களிலிருந்து அவர்களைக் காப்பாற்ற, அவர்களுடைய வலிவற்ற கூடாரங்கள்தான் இருந்தன.

அவர்கள் நெடுந்தொலைவு பயணம் போகும் முன் ஒரு கொடிய புயற் காற்றுத் தொடங்கியது. அவர்கள் ஒரு பாறையினடியிற் போய்ப் பதுங்கிக்கொண்டார்கள். மரத்துப்போயிருந்த கைகளால் அவர்கள் மிகுந்த வருத்தத்துடன் தங்கள் கூடாரங்களை அமைத்தார்கள். ஆனால், பனிப்புயல் பனித்துளிகளை எங்கும்

1. Bering Strait. 2. Vodka.

பரப்பியது. அவர்களுடைய [1]பர் உடையில் பனி படிந்தது. அன்றிரவு அவர்களுடைய கூடாரங்கள் இருமுறை கீழே வீழ்ந்தன. அவர்களுக்கு நெருப்பு இல்லை. அவர்கள் ஒருவருடன் ஒருவர் முடங்கி இருந்ததால் உண்டான வெப்பமே அவர்களுக்கு உணர்வு கொடுத்தது.

அவ்விரவின் நிகழ்ச்சி அவர்கள் பேரிங் நீர்ச் சேர்த்திக்குப் போய்ச்சேர அவர்கள் செல்லவேண்டிய வழியின் நிலைக்கு மாருத ஓர் அறிகுறியாயிருந்தது. அவர்கள் சிறுகச் சிறுகப் பயணஞ்செய்து, 1500-கல் தொலைவிலுள்ள [2]வடமுனைக்குப் போய்க்கொண்டிருந்தார்கள். அவ்வழி முழுதும் பனிமிதப்புக்களில் வந்த சுள்ளிகளே, அவர்களுக்கு இன்றியமையாப் பொருளாய் இருந்தன. அவை கிடைத்திராவிடில் அவர்கள் உயிர் துறக்க வேண்டியதே!

## வடமுனை

வடமுனையைக் கிட்டுவது அவர்களுக்கு மிகவும் தொல்லையாயிற்று. பனிக் கட்டிகள் தாறுமாருகப் பாறை பாறையாகப் படிந்திருந்தன. சிற்சில இடங்களில் அறுபது, எழுபது அடி வரையில் பனிக் கட்டிகள் உயர்ந்திருந்தன. அடிக்கடி இவற்றைத் தாண்டி அவர்கள் தங்கள் வண்டிகளைப் பெயர்த்து இழுத்துச் செல்ல வேண்டியதாயிற்று. அவற்றை இழுத்துச் செல்வது வருத்தமும், இடரும் மிகுந்த அலுவலாயிருந்தது.

## வடமுனை முதல் பேரிங் நீர்ச்சேர்த்தி வரை

வடமுனை தாண்டியதும் அவர்கள் பயணவழி சிறிது நல்லதாயிருந்தது. [3]தூந்திர நிலப் பரப்பு கரடு

1. Fur. 2. North Cape. 3. Tundra.

முரடு இன்றிச் சமனுக இருந்தது. அப்பரப்பில் பயணஞ் செய்து [1]கோலியுட்சின் தீவுக்கு மேத் திங்கள் 10-ஆம் நாள் வந்து சேர்ந்தார்கள்.

## கிழக்கு முனை

அதன் பின்னர்ப் பத்துநாட் கழித்து அவர்கள் பேரிங் நீர்ச் சேர்ந்தியின் ஆசியாக் கண்டத்துக் கரைக்கு வந்து சேர்ந்தார்கள். அப்போது அவர்கள் உலகின் கிழக்குமுனைக்கு வந்து சேர்ந்துவிட்டார்கள். அந் நிலையிற்முன் அவர்கள் இன்னல் மிகுந்த வழியனைத்தும் கடந்தவர்களானுர்கள்.

## கிழக்கு முனை முதல் [2]நோம் நகர்வரை

ஐந்துவார காலமளவும் அவர்கள் சைபீரியாவின் கோடியில் தங்க நேர்ந்தது. பனி உடைந்ததும் கிழக்கு முனையில் அவர்களைக் கண்டு அமெரிக்காவுக்கு அழைத்துப்போக ஓர் அமெரிக்கப் படகு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அவர்கள் காத்திருந்த காலம் மெல்ல மெல்லக் கழிந்தது. அவர்கள் அங்கே செய்யக் கூடிய வேலை யொன்றுமில்லை. அந்நாட்டு மக்கள் அவர்களிடம் பகை காட்டினர். அவர்கள் துப்புரவற்று இருந்தார்கள் அதனுலேயும் அவர்களுக்கு அங்குத் தங்கப் பிடிக்கவில்லை.

கடைசியாக ஜூன் 18-ஆம் நாளன்று அவர்கள் காத்திருந்த அமெரிக்கப் படகு வந்தது. அப்படகில் அவர்கள் ஏறிச் சென்முர்கள். கரையிலிருந்து ஆறுகள் பனி உறைந்திருந்தபடியால், அதற்குமேல் அப்படகு செல்ல முடியவில்லை. கரையிலிருந்து ஓர் எஸ்கிமோ

1. Koliutchin Island. 2. Nome City.

படகு பனியிற் சென்று அவர்களைக் கரைக்குக் கொண்டுவந்து சேர்த்தது. அவ்வாறாக அவர்கள், ஜுன் 19-ஆம் நாள், பாரிஸ் விட்டுப் புறப்பட்டதி லிருந்து ஆறு திங்கள் சரியாகக் கழிந்தபிறகு, அமெரிக் காவின் உள்நாடு வந்தடைந்தார்கள். அங்குச் சென்றது தும், கிறித்துவ சமயத்தலைவர் ஒருவருடைய குடிலிற் பத்துநாள் தங்கியிருக்க நேர்ந்தது.

பத்துநாட்கள் கழித்து அமெரிக்க நீராவிக் கப்பல் ஒன்றில் அவர்கள் சிறு பயணஞ்செய்து நோம் நகருக்கு வந்தார்கள். அற்றைக்கு நான்கு ஆண்டுகளுக்கு முன்னால், அந்நகரில் மூன்று நான்கு மரவீடுகளே இருந்தன. டி விண்ட்ட் அற்றைக்கு ஆறு ஆண்டு களுக்கு முன்னர் ஒரு தடவை அங்கு வந்திருந்த காலத் தில் அந்நகர் இருந்ததற்கு, அவர் இரண்டாம் முறை யாக வந்தபோது பார்த்தது முற்றிலும் வேறாயிருந்தது. இப்போது அது ஒரு பெரிய நகரமாகப் பெருகிச் சிற்றுண்டிச்சாலைகள், கோவில்கள், நடன அரங்குகள், அழகான கட்டிடங்கள் முதலியன நிறைந்து விளங் கியது. அவர் அந்நகர் சேர்ந்தவுடன் ஒரு தையற்கார ரிடம் சென்று தமக்கு ஒரு புதிய உடுப்பு செய்து கொள்ள வேண்டியதாயிற்று. அவர் அணிந்திருந்த பயண உடை மிகவும் பாழடைந்து போயிருந்தது. இவ்வாறு நோம் நகரம் பெருகக் காரணம், வடமேற்கு அமெரிக்காவில் பொற்கணிகள் கண்டுபிடிக்கப்பட்டமை தான்.

நோம் நகர் முதல் டாஸன் வரை

அமெரிக்காவில் அப்பகுதியில் தங்கந் தோண்டு மிடங்கள் புதிது புதிதாகக் காணப்பட்டமையால்,

அப்பக்கத்து ஊர்கள் எல்லாம் பல வழியிலும் சிறப்பான மாறுதல்கள் அடைந்தன. செல்வத்தாற் பெறக்கூடிய நலங்கள் அனைத்தும் அங்கு மலிந்திருந்தன. ஆதலால், நோம் நகரிலிருந்து அவர்களுடைய பயண நிலை சிறப்பானதாயிருந்தது. [1]யூகோன் ஆற்றில் ஒரு நீராவிப் படகேறி [2]டாஸன் நகர் அடைந்தார்கள். அந்நகரை அடைய அவர்கள் பதினன்கு நாட்களில் 1600-கல் தொலை போனார்கள். அவ்வளவு தொலை சென்றாலும், வருத்தம் என்பது அவர்களுக்குத் தெரியவேயில்லை. அவர்கள் சென்ற நீராவிக் கப்பலில் எல்லா நலங்களும் அமைக்கப்பெற்றிருந்தன. பயணஞ் செய்பவர்களுடைய நன்மைக்கு வேண்டிய பற்பல ஏற்பாடுகளும் அக்கப்பலில் செய்யப்பட்டிருந்தன.

## தங்க வெறி

டாஸன் நகரில் அவர்கள் பெரிதும் கொண்டாடப்பட்டார்கள். உலகின் பல பகுதிகளிலிருந்தும் 30,000 மக்கள் அங்கு வந்து குடியேறி யிருந்தார்கள். அந்நகர மக்கள் அனைவர்க்கும் ஒரே வெறிதான்—அதாவது விரைவில் பொன்னைத் தேடிக்கொள்ள வேண்டுமென்பது. தாமதித்தால் இன்னும் பலர் கூடிப் பொன்னெடுக்க வந்துவிடுவார்கள் என்ற அச்சம் அந்நகர மக்களுக்கு உண்டு. கடைக்காரர்களுக்கும் பொன் மயக்கம் ஏற்பட்டிருந்தது. ஆதலால் அவர்கள் தங்கள் பொருள்களையெல்லாம் பன்மடங்கு விலை ஏற்றி விற்றார்கள். ஒரு செய்தித்தாளின் விலை ஒரு ஷில்லிங்; ஒருவேளை உணவின் விலை ஐந்து டாலர்கள். இவ்வளவு செல்வம் மலிந்த ஊரில் செய்யப்பட்டிருந்த முன்னேற்றங்கள் பலப்பல.

---

1. Yukon. 2. Dawson City.

டி வின்ட்ட் டாஸன் நகரிலிருந்து லண்டனுக்கு ஒரு தந்தி யனுப்பி, அதற்கு விடைபெற ஏழுமணி நேரந் தான் ஆயிற்று. பொருள் உள்ளார்க்கு எதுதான் எப்படித்தான் நடக்காது?

## டாஸன் நகர் முதல் நியூயார்க் வரையில்

டாஸன் நகரிலிருந்து நீராவிக் கப்பலிலும், பிறகு ரயிலிலும் பயணஞ்செய்து [1]'வெண் கணவாய்' கடந்து [2]ஸ்காக்வே என்னும் கடற்றுறையை அடைந்தார்கள். அங்கிருந்து [3]சியாட்டல் என்னுமிடத்திற்கு வந்தார்கள். அமெரிக்க நாடுகளின் வழியே [4]ஸான் பிரான்ஸிஸ்கோவி லிருந்து ரயிலில் சென்று, 1902-ஆம் ஆண்டு ஆகஸ்டு 25-ஆம் நாள் [5]நியூயார்க் நகரம் வந்து சேர்ந்தார்கள்.

டி வின்ட்ட் அவ்வளவு பெருந் தொலையைத் தரை வழியே கடக்க முடியுமென்று காட்டினார். குளிர் நிறைந்த பனிவயற் பரப்புகளின் வாழ்க்கை விவரங்கள் இவரைப்போன்றவர்கள் சென்ற பயண வரலாறுகளி லிருந்துதான் அறியக்கிடக்கின்றன. இயற்கையை மக்கள் பண்படுத்தும் முயற்சியும், இயற்கை மக்களை அடிமைப்படுத்தும் நிலையும் ஒரு பெரும் போராட்டம் என்னும் உண்மை இத்தகைய வரலாறுகளிலிருந்து தான் நன்கு புலனாகின்றது.

---

1. White Pass. 2. Skagway. 3. Seattle.
4. San Francisco. 5. New York.

